ஸ்ரீ :

# ஸ்ரீத்யாகராஜக்ருதிமாலா

(தமிழ்)



அமைப்பு

கும்பகோணம்
திருமதி. ஜெயம்மாள் (வீணை வாய்ப்பாட்டு)

# ஸ்ரீ வைஜயந்தீ கீதஸுதாதரங்கிணீ

# श्री वैजयन्ती - गीतसुधातरङ्गिणी

[This book is published with the
Financial Assistance of Tirumala Tirupati Devasthanam
under the scheme Aid to Publish Religious Books)

ஆசிரியர்
ஹரிதாஸ ராமசேஷன்
ஸ்ரீரங்கம்

 [Price Rs. 20/- Postage Extra]

# Bibliographical Information


| | |
|---|---|
| *Title of the Book* | **Sree Vaijayanthee & Geetha Sudha Tarangini** |
| *Author.........* | **K.N. Ramaseshan, M.A., B.T**<br>7, Fifth Street, Srinivasanagar, TIRUCHY |
| *Editor........* | **S.K.S. Raghavan**<br>9, Vasanthanagar, Srirangam |
| *Language........* | Sanskrit and Tamil |
| *Edition* | First Edition |
| *Year of Publication* | 1990 |
| *Copyright holder* | K.N. Ramaseshan (Author) |
| *Quality of paper used* | Cream wove 56 gsm. |
| *Size of the Book* | Crown 1/4 |
| *Number of Pages* | 130 |
| *Number of Copies* | 1200 |
| *Printers* | Sarma's Sanatorium Press, Pudukkottai |
| *Wrapper Printers* | ...... |
| *Acknowledgements* | Financial aid for Printing by<br>T.T.Devasthanams, Tirupati<br>Paper by<br>M/S Seshasayee Paper & Boards Ltd., Erode.<br>Rtn. T.S.Srinathan, Proprietor,<br>Nathan Mining Works<br>25, Duraisamy Iyer Lay-out, Udumalpet<br>Sri.S.Pattabiraman B.Sc(Engg.), G.B.Enterprises<br>Thuvakkudy, Trichy - 620 015 |
| *Copies available with* | K.N. Ramaseshan<br>7,Fifth Street, Srinivasanagar,<br>TIRUVANAIKOIL P.O. TIRUCHY 5<br>S.K.S. Raghavan<br>9, Vasantha Nagar, Srirangam, TIRUCHY-6 |

ஸ்ரீ:

## ஸ்ரீ அஹோபில மடம்
## ஸ்ரீமதழகியசிங்கர் அருள்வாக்கு

*(வைஜயந்தீ பற்றி)*

இதை முழுக்கக் கேட்டேன். ரொம்ப ஸந்தோஷமாக இருக்கிறது. எல்லாம் கடைசி பர்யந்தம் பகவத் விஷயமாகவே ஞானத்தை மேலே மேலே அபிவிருத்தி பண்ணுவதாக இருக்கிறது. நல்லகதியடைவதற்கு இந்த பாசுரங்கள் எல்லாம் முக்யமான மருந்து மாதிரியாகும்.

ஸ்ரீ சடகோப ஸ்ரீ:

ஸ்ரீ முகம்

ஸ்ரீ அஹோபில மடம்
Camp: ஸ்ரீரங்கம்,
துந்துபி ஐப்பசி 27.
13.11.82

*ரங்கபதேர்ஹ்ருதிதார்யா மாலா ஸேயம் ஸுசோபதாம் விதுஷாம்*
*ஸ்ரீ ராமசேஷரசிதா ஜீயாதாசந்த்ர தாரகம் பூமௌ*

ராமசேஷனால் இயற்றப்பட்ட இந்த ரங்கபதி கீர்த்தனை மாலையை ஸ்ரீமதழகியசிங்கர் பூராவும் கடாக்ஷித்து அனுக்ரஹித்தாயிற்று. இதில் ஸ்ரீ ரங்க க்ஷேத்திரத்தின் மஹிமை, ஸ்ரீ ரங்கநாதனுடைய ஸௌந்தர்யம், அவனிடத்தில் பக்தி, அவனைத் திருப்பள்ளியிலிருந்து எழுப்புதல், பூச்சாத்து உற்சவம், இந்த ரங்கநாதனே வேதாந்தங்களால் கூறப்படும் பரதேவதை ராமாவாதாரச் சிறப்பு முதலிய அரிய பெரிய விஷயங்கள் அடங்கியுள்ளன எல்லா பாடல்களும் மனதை அபகரிக்கின்றன. இந்நூல் ஆறாத அமுதமாய் அமைந்துள்ளது. பக்தியைப் பெருக்கும் பாடல்கள் இவை. ஞானத்தை மேன்மேலும் வளர்க்க சித்தௌஷதமாய் விளங்குகிறது இந்நூல். மனிதர்கள் நற்கதியை அடைவதற்கு இந்நூல் சிறந்த உபாயமாய் அமைந்துள்ளது எல்லாம் எம்பெருமானையே சொல்லும் நூலாக விளங்குகிறது. இதை அனைவரும் படித்து பயன் பெறுவார்களாக என்று அழகியசிங்கர் அனுக்ரஹித்தாயிற்று.

ஸ்ரீ அஹோபிலமடம் ஆஸ்தான வித்வான்
பெருங்காரணை சக்ரவர்த்தியாச்சாரியார்



राष्ट्रपति
भारत गणतंत्र
PRESIDENT
REPUBLIC OF INDIA

புது தில்லி

மே 7, 1988.

அன்புள்ள ஸ்ரீ ராகவன் அவர்களுக்கு,

தங்கள் 29-ஆம் தேதிய கடிதம் கிடைத்தது. ஸ்ரீரங்கத்தில் தாங்கள் என்னிடம் கொடுத்த, பம்பாய் சகோதரிகள் பாடிய ஸ்ரீ வைஜயந்தி கேசட்டைக் கேட்டேன். பாடல்கள் மிகவும் நன்றாக அமைந்துள்ளன. இசைச் சகோதரிகளின் தெய்வீகப் பணி மேலும் தொடர எனது மனமுவந்த நல்வாழ்த்துக்கள்.

தங்கள் அன்புள்ள,

ஆர். வெங்கட்ராமன்

(ஆர். வெங்கட்ராமன்

ஸ்ரீ. எஸ். கே. எஸ். ராகவன் அவர்கள்
9, வசந்த நகர்,
ஸ்ரீரங்கம்,
திருச்சி 620 006.

# மதிப்புரைகள்

ஸ்ரீ:

*நியாய சிரோமணி, தர்கரத்னம்,*
*நியாய வேதாந்த கேஸரி,*
திருமலை ஈச்சம்பாடி
வித்வான் உ.வே. மதுராந்தகம் வீரராகவாச்சாரியார்.
*ஸ்ரீரங்கவாஸி*

*ஸ்ரீரங்கம்,*
*18.12.81*

"பொருள் மேம்பாட்டின் சிறப்பால் கவிதைச் செல்வம் பொலிவடைகிறது" என்ற காவிய இலக்கண நியமப்படி விநாயகர் துதியுடன் துவங்கும் திருவரங்கன் பெருமைகளை விளக்கும் இப்படைப்புகள் அன்பர்களுக்கு அதிகமான மனமகிழ்ச்சியை ஊட்டக் கூடியவை என்பதை நான் உறுதியாக நம்புகிறேன். இறைவனோ இசையில் நாட்டமுடையவன். இப்படைப்புகளும் இசை வடிவத்தில் அமைந்துள்ளன. எனவே இசை வல்லுனர்களால் அதிகம் போற்றப்படும் என்பதில் யாதொரு கருத்து வேற்றுமையும் இருக்க முடியாது.

பிறமொழிகளில் தேர்ச்சியுள்ள ஸ்ரீ ஹரிதாஸர் என்பவர் வடமொழியிலும் நல்ல பாண்டித்யம் கொண்டுள்ளது தங்க மலர் மணம் பெற்றது போல் உள்ளது.

மதுராந்தகம் வீரராகவாச்சாரியார்,
ஸ்ரீரங்கம்.

* * * *

Sangita Kalanidhi
Dharmapuram Adhina Vidwan.
Thiyagamani, Kalaimamani.
Kirthanakulasekhara,
Sangeetha Sahityavallabha,
Katharasaswadaka
**Embar S. Vijayaraghavachariar,**
Fellow of Sangit Nataka Academy, Delhi.

79, East Chitra Street,
Srirangam Tiruchy-6
Phone: 85283
Date:31.1.83
Camp: Srirangam.

"வைஜயந்தீ" என்னும் தலைப்பில் மூன்று பாகங்களாகப் பிரித்து ஒவ்வொரு பாகத்திலும் பத்து கீர்த்தனங்களைக் கொண்டதாக அமைந்த தொகுப்பினைப் படைக்கும் ஆற்றல் பெற்றவராகத் திகழ்கிறார் எனது இனிய நண்பர் ஸ்ரீ K.N. ராமசேஷன் அவர்கள். இவருடைய அனைத்துக் கீர்த்தனங்களும் ஸம்ஸ்க்ருதத்தில் அமைந்திருக்கின்றன.

ஸம்ஸ்க்ருதத்தில் பாடுவதற்கு அனுகூலமான பதங்கள் அமைவது என்பது மிகவும் சிரமம். இவருக்கு ஈச்வரன் பரிபூர்ணமாக அனுக்ரஹம் செய்து இருக்கிறார். அனைத்துக் கிர்த்தனங்களிலும் சொற்சுவை, பொருட்சுவை, ராகபாவம், தாளம் எல்லாம் நன்கு அமைந்து இருக்கின்றன.

எம்பார் விஜயராகவாச்சாரியார்

* * * * * * *

ஸ்ரீ:

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

அண்ணன் திருவடிகளே சரணம்

*வித்வான், ஸாஹித்ய ரத்னம், வைஷ்ணவ ரத்னம், வேத-நெறி வித்தகர், ப்ரவசனமணி, சதுரகவி, பண்டிதசிகா-மணி, அருளிச்செயல் அருளமுதுச் செல்வர், பஞ்ச மாம்னாய ரத்னம், ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய பாஸ்கர், கலைமலிந்த சீர் நம்பி, விஷ்ணு பரத்வ ஸ்தாபக தீர சிகா-மணி, வைஷ்ணவ ஸம்ப்ரதாய ப்ரவர்த்தக ஸம்பன்னர்*

R. நரசிம்மாச்சாரியார்,
50, மேல உத்திர வீதி,
ஸ்ரீரங்கம், திருச்சி-6.

இவரது பாடல்கள் கீதகோவிந்தமோ, கிருஷ்ண லீலாதரங்கிணியோ என்ற தைவீக உணர்வையூட்டி மகிழ்விக்கின்றன. இவ்விதமான பாடல்கள் கலி ஆட்சி புரியும் இக்காலத்தில் கிடைப்பது அரிது அரிது. இவற்றைப் படித்து இன்புற்று அரங்கனின் திருவருளுக்குப் பாத்திரமாக வேணுமென ப்ரார்த்திக்கிறேன்.

அன்பன்

R. நரசிம்மாச்சாரி 16.11.82

* * * * * *

ஸ்ரீ:

சேங்காலிபுரம் ஸ்ரீ அனந்தராம தீக்ஷிதரின் பிரிய சிஷ்யர் ப்ரவசன ரத்ன, ப்ரவசன ஸார்வ பௌம, சொல்லின் செல்வர், அபிநவ வ்யாஸர், பக்தி ரஸாம்ருத தத்வ வர்ஷீ, ப்ரவசன கலாசாகர, வைகாநஸ, ஸ்ரீ. உ.வே.சேங்காலிபுரம்
S.B. கல்யாணராம பட்டாச்சாரியார் சேங்காலிபுரம் S.O.
கும்பகோணம் R.M.S. 612 604. தஞ்சாவூர் ஜில்லா

ஸ்ரீமான் ராமசேஷய்யர் மிகுந்த பக்தியினால் தனக்கு கிடைத்துள்ள தைவீக அருளை தெய்வத்திற்கே அர்ப்பணம் செய்துள்ளார். அவர்கள் மிகுந்த பக்தியுடன் ஸ்ரீரங்கத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீரங்கநாதனைப் பற்றியும் சூழ்ந்துள்ள மற்ற தெய்வங்களைப் பற்றியும் மிக அழகான முறையில் கீர்த்தனை செய்துள்ளார். பன்னிரண்டு ஆழ்வார்களால் பாடப் பெற்ற பாடல்களின் கருத்துக்களையும் ஸ்ரீமத் ராமாயணத்தில் உள்ள பல கருத்துக்களும் இவர்களுடைய கீர்த்தனைகளில் மிகவும் தெளிவாக விளக்கப்படுகின்றன.

ஸ்ரீரங்கநாதருக்கு நடக்கும் உத்ஸவங்களையும், ஸ்ரீ பெருமாள் எழுந்தருளும் வைபவங்களையும் முறைகளையும் சம்பிரதாயங்களையும் விளக்கியுள்ளார். இவைகளைப் பார்க்கும் பொழுது ஸ்ரீ ரங்கநாதரே ஸ்ரீ ராமசேஷன் அவர்கள் மூலம் தன்னுடைய பெருமைகளை கீர்த்தனைகள் மூலம் கேட்க ஆஸ்தைப் பட்டிருக்கிறார் என்று தோன்றுகிறது., இவ்விதம் ஸ்ரீரங்கநாதனின் பெருமைகளை பாடியவர் இவர் ஒருவரே.

S.B. கல்யாணராம பட்டாச்சாரியார்
சேங்காலிபுரம் S.O.
கும்பகோணம் R.M.S. (612 604)

N. Rangaraja Bhattar,
Sri Ranganathaswamy Etc.,
Devasthanam,
Member: Expert's Committee,&
State Advisory Committee Member.
H.R. & C.E. Govt of Tamil Nadu.

Phone: 85-373
"Sri Maha Prabu Sadanam"
15, North Chitra Street,
SRIRANGAM - 620 006.
Date: 7.1.1983

"ஸ்ரீ வைஜயந்தி எனும் ஸ்ரீரங்கபதியின் கீர்த்தனமாலை" என்ற தலைப்புடன் இவ்வெளிய நூலை கீர்த்தனை மூலமோ, பாராயணம் மூலமோ அறிந்து போற்றினால் ஸ்ரீரங்கபதியின் அஞ்சேல் என்ற அபய முத்திரையும், புன்முறுவலும் கூடிய பற்றுடைய அடியவர்களுக்கு எளியவனின், திருவருள் கிட்டுமென்பதில் ஐயமில்லை.

அடியார்கள் வாழ! அரங்க நகர் வாழ போற்றுவோம்.

தாஸன்
N.ரங்கராஜ பட்டர்
7.1.83

VAIDYA
**S.V. Radakrishna Sastri**
Ayurveda Siromani, Vaidya Visarada,
Registered Ayurvedic Practitioner,
*ஆசிரியர்- "ஆரோக்கியம்," "ஸம்ஸ்க்ருத ஸ்ரீ:"*
*25, தஞ்சாவூர் குளத்தெரு, திருச்சி-2.*

ஸ்ரீரங்கநாதரின் அருள்நோக்கு "ஸ்ரீ வைஜயந்தீ" என்ற நூலை இன்று நமக்கு அளித்துள்ளது. ஸ்ரீரங்கநாதனின் திவ்ய வைபவங்களைப் பல கோணங்களில் கண்டுகளித்த ஸ்ரீமான் K.N. ராமசேஷய்யர் அவர்களின் உள்ளத்தில் ஸ்ரீரங்கநாதரின் கருணை திடீரென ஒரு கிளர்ச்சியைத் தந்து பல்வேறு கீதங்களாக இதனை வெளிப்படுத்தியுள்ளது. ராக-லய-பாவ புஷ்டியுடன் விளங்கும் இந்த கீர்த்தனங்கள் அழகாக இசைவடிவில் சிரவணரஸ்யமாக காஸெட் மூலம் கேட்டு மகிழ்ந்தேன்.

பாவபுஷ்டியுடன் இனிய இந்த கீர்த்தனங்களைக் கேட்கக் கேட்க ஸ்ரீரங்கநாதரின் திவ்ய லீலைகள் மனதில் பதிந்து நல்ல வாஸனைகளை ஏற்படுத்தி ஒவ்வோர் உள்ளத்தையும் மேம்படச் செய்யும் என்பதில் ஐயமில்லை.

ராதாகிருஷ்ணசாஸ்த்திரி

Dr. K.S. Gopinathan,
B.Sc., M.B.B.S., F.C.G.P.
Registered Medical Practitioner,(No. 12558)
Fit Person, Sri Ranganathaswamy Devasthanam etc,
Honry Agent, Sri Sumathoendraswamy Mutt, Srirangam.

Phone: 85-209
"SRINIVAS"
17, Ranganathapuram
SRIRANGAM,
TIRUCHY - 620 006.

பகவானைப் பாடிப் புகழ்ந்து அவனருள் பெருவதில் "ச்ரவணம் கீர்த்தனம் விஷ்ணோ:" என சொல்லப்படுவது போல, ஆண்டவன் திருநாமம் பக்தி பூர்வமாக இயற்றப்பட்ட பாடல்கள் மூலம் தக்க ராக தாளங்களுடன் கேட்டு மகிழ்வதைவிட சிறந்த முறை யாதேனும் உண்டோ? அந்த இன்பத்தை அன்பர் திரு ராமசேஷன் அவர்கள் தனது அற்புதமான சிறந்த, ஜனரஞ்ஜகமான ராகங்களில் அமைந்த முப்பது கீர்த்தனங்களில் தற்சமயம் அளித்திருக்கிறார்.

சாஸ்த்திரம், ஸங்கீதம் அறிந்த மறையோர்களாலும், பெரியோர்களாலும் பெரிதும் உவக்கப்பட்ட இந்த "வைஜயந்தி" என்ற கீர்த்தனைத் தொகுப்பு ஸ்ரீரங்கராஜருக்கு அளிக்கப்படும் "வைஜயந்தி ஹாரம்" என்பதில் சந்தேகம் இல்லை.

K.S. கோபிநாதன் 11.1.1983

"Pravachana Pravina"
"Tiruppani Tilakam"
"Pandita, Siromani"
A.S. Ranganathachariyar of Tanjore
Religious Lecturer, Freedom Fighter, Journalist
Receipient of Teahcers National Award
Spl. CORRESPONDENT "GNANA BHUMI"

"Sahityalankara"
"Pavai Prachanamani"
- Now At -
(Bharathiya Vidya Bhavan)
No. 32, VVCR Colony
ERODE 638 001

"வைஜயந்தி" ஸ்ரீரங்கபதியின் வைஜயந்தியாகப் புகழ்பாடுகிறது. ஒவ்வொரு பதமும் மிகுந்த அர்த்த புஷ்டியுடன் தெய்வீக அருள்வாக்காக அமைந்துள்ளது. தெய்வீக மணம் கமழும் தங்கள் பாட்டுக்கள், உலகுள்ளவரை தங்கள் புகழையும் சேர்ந்து பாடும். ரங்கபதி கீர்த்தனை மாலை ஒரு வாடாத மாலை.

A.S. ரங்கநாதாச்சாரியார்
21.5.84

* * * * * *

The kritis offered in the Cassete have been selected from about thirty songs composed by Sri Haridasa Ramaseshan in Sanskrit, They are mellifluent and full of emotion and go straight to the heart..... The Bombay sisters have rendered them with clarity and musicality. Their Voices blend so admirably that the garland of songs is real Vaijayanthi, a flagrant offering to the Lord.

Smt Mani Krishnaswami
Review in SRUTI (June 1984)

* * * * * *

These Kritis have been composed or rather brought out by inspiration by Sri Haridasa Ramaseshan and they exhibit rare qualities of music to be found only in the works of great composers of the past. Steeped in devotion and Bhakti these Kritis are in simple understandable Sanskrit in easy flowing style and they go straight to the heart. They are surcharged with emotion or Bhava and leave a lasting impression on the listners.

The Indian Express 10.3.84
Review of Casset

* * * * * *

In the musical compositions, one can find a happy combination of Sastras, Sampradaya (Tradiation) and music and a harmonious blending of art and religion, sound and sense, music and emotion ... The songs have been rendered by the Bombay sisters with due regard for their emotional content and the pronunciation of the Sanskrit words and phrases (by no means an easy task while singing) is praiseworthy.

Review
Sri Nrisimha Priya
April-May 1984

* * * * * *

## ஸ்ரீ வைஜயந்தீ

(ஒலிப்பதிவாகிய காஸெட்)

| | |
|---|---|
| பாடியவர்கள் | பம்பாய் சகோதரிகள்<br>ஸ்ரீமதிகள். C. சரோஜா & C. லலிதா |
| இசை அமைப்பு | ஸ்ரீ T.K. கோவிந்தராவ் |
| கீர்த்தனங்கள் | ஹரிதாஸ ராமசேஷன் |
| வயலின் | ஸ்ரீமதி A. கன்யாகுமரி |
| மிருதங்கம் | ஸ்ரீமுஷ்ணம் ராஜாராவ் |
| கடம் | ஸ்ரீ N. கோவிந்தராஜன் |
| நிர்வாகம் | ஸ்ரீ S.K.S. ராகவன். |

சங்கீதா கம்பெனி வெளியீடு
(BECDB - 190 Stereo - 60 minutes)

# முன்னுரை

''இறைவன் இசையில் சான்னித்யமாகிறான்'' என்பதற்கிணங்க-' ''ஶ்ரீவைஜயந்தீ-கீதஸுதா தரங்கிணீ-திருவரங்கன் பாமாலை'' என்ற மூன்று பாகங்களும் விளங்குகின்றன. கண்டுகளித்து, மனம் கசிந்து, அனுபவித்த-அனுபூதியே இந்த சம்ஸ்கிருத தமிழ் கிருதிகள். பாஞ்சராத்ர, ஆகமம், வேதம், உபநிஷத் எல்லாம் எந்தப் பரம்பொருளைப் புகழ்ந்து பறைசாற்றுகிறதோ-அந்தப்பரம்பொருளைப் பளிச்சென்று காட்டும் மூன்று நிலைக்கண்ணாடிகள்-இந்த திரிவேணி சங்கம சாகித்யங்கள்.

நல்ல உச்சரிப்புடன் பாடுவதற்கு உதவும் வகையில் வடமொழி சாகித்யங்கள் பாடி அனுபவிப்பதற்கு ஏற்றவாறு தமிழில் அச்சிடப் பட்டுள்ளன. அதுமட்டுமல்ல, அதன் பொருளும் பாவங்களும் எளிதில் புரிந்து கொள்ளும்படி எளிய தமிழ் நடையில் ஒவ்வொரு சம்ஸ்கிருத கீர்த்தனமும் விளக்கப்பட்டுள்ளது.

வடமொழி, சங்கீதம் அறிந்தவர்கள் மட்டும் இதை ஆனந்தித்து அனுபவிப்பார்கள் என்றில்லாமல் வடமொழி அறியாதவர்களும் தமிழில் அச்சிடப்பட்ட கீர்த்தனைகள், உறைமூலம் அதே அனுபவம் கிட்ட வழிசெய்கிறது. படித்துப் பயன்பெறுவது ஒரு வகை. பாடிப் பரவசமடைவது இன்னொரு வகை. இந்த இரண்டு அபிலாஷைகளையும் பூர்த்தி செய்யும் வண்ணம் இவைகள் அச்சிடப்பட்டுள்ளன. தங்கத்தில் வைரம் பதித்தால் போல் சம்ஸ்கிருத சாகித்யங்கள் கர்நாடக இசையில் ஜ்வலிக்கின்றன. நாட்டியத்திற்கும் ஏற்றவாறு சில சாகித்யங்கள் நயமும், லயமும் பாவமும் கொஞ்சுகின்றன.

T.T.D தேவஸ்தானம் இதற்கு பேராதரவு கொடுத்து வெளியிடுவது-ஶ்ரீயப்பதி ஶ்ரீனிவாஸனே அனுக்ரஹித்ததாகும். சாகித்யங்கள் பிறக்கலாம். ஆனால் அதை எடுத்து வளர்த்து போஷிப்பது, இசைக்கலைஞர்கள், பரதநாட்டிய விற்பன்னர்களே. அவ்வகையில் இந்த கீர்த்தனங்களுக்கு ஆதரவு அளித்து தெய்வ் பக்திமணத்தை எங்கும் பரவச் செய்து பரமாசிகரான பரிமளரங்கன் பரிபூர்ண கடாக்ஷத்தைப் பெற- அவன் தாள் பணிந்து-பிரார்த்திக்கிறேன்.

கோவிலடி S.K.S. ராகவன்
9, வசந்தநகர், ஶ்ரீரங்கம்
(பதிப்பாசிரியர்)

# ஸமர்ப்பணம்

பகவானுடைய திவ்யமங்களமான ரூபஸௌந்தர்யத்திலும் ஸ்வரூப லாவண்யத்திலும், அளவிடமுடியாத ஸௌசீல்யாதி மேன்மைகளிலும் ஈடுபட்டு மனதைப் பறிகொடுத்து மெய்மறந்த நிலையில் ஆனந்தானுபவம் பெருவதே பக்திமார்க்கத்தின் ஸாரம் என்பது சான்றோர்கள் பெரியோர்கள் வாக்கும், அநுபவமும் ஆகும். இவ்வித ஆனந்த நிலையை அடைவதற்கு நாதமயமான ஸங்கீதத்தின் துணை கொண்டு கானம் செய்வது ஓர் அபூர்வமான ஸாதனம். அப்படி கானம் செய்வதற்கு ஏற்றவகையில் பாவ புஷ்டியுடன் கூடிய ஸாஹித்யங்களை ஸங்கீதமும்மூர்த்திகள் போன்ற மஹனீயர்கள் நமக்கு அளித்துள்ளார்கள்.

இவ்வித பெரியோர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றியே தற்காலத்திலும் பல ஸாஹித்யங்கள் வெளிவந்து போற்றப்பட்டு வருகின்றன. அந்த வகையில் இறைவனுடைய மேலான அருள் பிரவாகத்தின் விளைவாக ஸ்ரீரங்கம் திவ்ய தம்பதிகள், மற்றும் பல புண்ணியத் தலங்களில் குடிகொண்டுள்ள மூர்த்திகளைக் கண்ணாரக் கண்டு அடிபணிந்து நின்ற நிலையில் உள்ளத்தில் தோன்றிய கிளர்ச்சிகள் சொற்கள் வடிவத்தில் நாதக்கட்டுடன் வெளிவந்தவைகளே இக்கீர்த்தனைத் திரட்டாகும். இக்கீர்த்தனங்களில் பெரும்பாலானவை வடமொழியிலும் சில க்ருதிகள் தமிழிலும் அமைந்துள்ளன. இவற்றுள் முதல் பகுதியில் "ஸ்ரீ வைஜயந்தீ" என்ற தலைப்பில் அடங்கியுள்ளவை முற்றிலும் திருவரங்கனைப் பற்றியேயாகும். "கீதஸுதா தரங்கிணீ" என்ற இரண்டாம் பகுதியில் திருவரங்கன் அரங்கநாயகீ மற்றும் பல மூர்த்திகளைப் பற்றிய ஸாஹித்யங்கள் அடங்கியுள்ளன. தமிழ் பாடல்கள் யாவும் "அரங்கன் பாமாலை" என்ற மூன்றாம் பகுதியில் இடம் பெற்றுள்ளன. இக்கிருதிகளின் திரண்ட கருத்துக்களை என்னால் இயன்ற அளவிற்கு எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் அளித்துள்ளேன். மூலம், அவற்றின் உரைகளில் உள்ள குறைகள் யாவும் என்னுடையவையாகும். இக்குறைகளை நீக்கி குணங்களை மட்டும் ஏற்றுக் கொள்ள அன்பர்கள் அனைவரையும் தாழ்மையுடன் வேண்டிக் கொள்கிறேன்.

இக்கிருதிகளை பெரும் கருணையுடன் கடாக்ஷித்து தங்கள் அருளாசிகளையும் ஸ்ரீ முகங்களையும் வழங்கியுள்ள பூஜ்யர்களான ஸ்ரீ காஞ்சி

காமகோடி பீடாதிபதி சங்கராசார்ய ஸ்வாமிகள், ஸ்ரீ மதஹோபில மடம் ஸ்ரீ மதழகியசிங்கர் ஸ்வாமிகள் ஆகியோர்களின் சரண கமலங்களில் சிரம் தாழ்த்தி எனது வினய பூர்வமான பிரணாமங்களை செலுத்துகிறேன்.

ஒலிப்பதிவாகிய காஸெட்டைக் கேட்டு தன்னுடைய மேலான மதிப்புரையை அளித்துள்ள பாரத ஜனாதிபதி அவர்களுக்கு திருவரங்கன் திருவருள் புரிய ப்ரார்த்திக்கிறேன்.

அதேபோல் தர்க்கம், வேதாந்தம் முதலிய பல சாஸ்திரங்களிலும் தலை சிறந்து விளங்கிய மகாவித்வான் உ.வே.ஸ்ரீ மதுராந்தகம் வீரராகவாச்சாரியார் ஸ்வாமிகள் அவர்கள் இக்கீர்த்தனங்களைப் பார்வையிட்டு அன்புடன் நல்லாசிகள் வழங்கியுள்ளார்கள். இன்று அரங்கனடி சேர்ந்துள்ள அவருக்கு எனது பிரணாமங்களை செலுத்துகிறேன்

இத்தைவீகப் பணியில் என்னை ஈடுபடுத்தி மேலும் மேலும் இக்கிருதிகள் நல்ல முறையில் உருவெடுக்க ஊக்கமளித்தும் இவை முழு உருவம் பெற்ற பின்னும் சிறந்த ஆசி மொழிகள் அளித்து இவற்றை வெளியிட வேண்டும் என்றும் தூண்டிக் கொண்டிருந்த ஹரிகதா திலகம் 'சங்கீத கலாநிதி' வித்வான் எம்பார் விஜயராகவாச்சாரியார் அவர்களுக்கு எனது வணக்கங்களையும் ஆழ்ந்த நன்றிகளையும் செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

மற்றப்படி இப்பணியில் கீர்த்தனங்களில் உள்ள குற்றம் குறைகளை அவ்வப்போது எடுத்துக்காட்டி, சாஸ்திர, ஸம்பிரதாய முறைகளை விளக்கி சிறந்த மதிப்புரைகளை வழங்கியுள்ள மஹனீயர்கள் வித்வான்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆரம்பத்தில் இக்கிருதிகளுக்கு இசைவடிவம் அமைத்து சங்கீத முறைப்படி பாடி காஸெட்டில் ஒலிப்பதிவு செய்துதவிய வித்வான் ஸ்ரீ நடாதூர் N.S. விஜயராகவன் அவர்களுக்கு அரங்கன் அருள்புரிய பிரார்த்திக்கிறேன்.

ஸ்ரீரங்கம் ராஜகோபுர திருப்பணியில் ஈடுபட்டு வைஜயந்தீ க்ருதிகள் சிலவற்றை சங்கீதா காஸெட்டில் ஒலிப்பதிவு செய்து அதன் வருவாயை அர்பணிக்க முன்வந்த ஸ்ரீமதிகள் பம்பாய் ஸஹோதரிகள் ஸ்ரீமதிகள் C. சரோஜா, C. லலிதா அவர்களுக்கு, அரங்கனின் பூர்ண அநுக்ரஹம் ஏற்பட வேண்டுகிறேன்.

இக்கிருதிகளைக் கேட்டமாத்திரத்தில் இவற்றை எப்படியும் வெளிப்படுத்தி எல்லா அன்பர்களும் கேட்டு ஆனந்திக்க வேண்டும் என்ற ஆர்வத்துடனும், துடிதுடிப்புடனும் எல்லா பணிகளையும் திறம்பட நிறைவேற்றி எனக்கு உறுதுணையாக இருந்து வரும் பதிப்பாசிரியர் ஸ்ரீ S.K.S. ராகவன் அவர்களுக்கு அரங்கன் பரிபூர்ண அருள் புரியவேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

இப்பதிப்பிற்கு நிதி உதவி அளித்துதவிய திருமலை திருப்பதி தேவஸ்தான நிர்வாகம், ஆசிரியர், ஸப்தகிரி முதலியவர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். அதேபோல் இப்பதிப்பிற்கான காகிதங்களை நன்கொடையாக வழங்கியுள்ள தொழில் பேப்பர் நிறுவனத்தார்களுக்கும், சிறந்த முறையில் அச்சிட்டு வெளியிட திறமையுடன் ஒத்துழைத்த புதுக்கோட்டை சர்மா சானடோரியம் பிரஸ் நிறுவனத்தின் உரிமையாளர்கள், அனைத்துப் பணியாளர்களுக்கும், அட்டைப்படத்தை கவர்ச்சிகரமாக தயாரித்துதவிய அச்சகத்தாருக்கும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

அச்சுப்பிரதிகளை நன்கு பரிசீலித்து திருத்தங்கள் செய்து உதவியுள்ள என் நண்பர் ஸ்ரீ நீலகண்டன், ஸ்ரீரங்கம் அவர்களுக்கு திருவரங்கன் அருள்புரிய பிரார்த்திக்கிறேன்.

இறுதியாக எனது மேலான தாய், தந்தையர், அரங்கனடி சேர்ந்த எனது வாழ்க்கைத்துணைவி மீனாக்ஷி அம்மாள் எனது நெருங்கிய நண்பராய் விளங்கி அமரரான இசைமேதை ராமநாதபுரம் கிருஷ்ணன் ஆகியோர்களின் ஞாபகார்த்தமாக இப்பாமாலையைத் திருவரங்கன் திருவடித்தாமரைகளில் ஸமர்ப்பிக்கிறேன்.

ஹரிதாஸ ராமசேஷன்
ஸ்ரீரங்கம்

குறிப்பு: மூலம் தமிழ் உரை முதலியவற்றில் திருத்தங்கள் நூலின் முடிவில் அளிக்கப்பட்டுள்ளன. இத்திருத்தங்களை ஏற்றுக் கொண்டு இந்நூலை பயன்படுத்த அன்பர்களை பணிவன்புடன் வேண்டிக் கொள்கிறேன்.

# கீர்த்தனங்கள் அட்டவணை


| கீர்த்தனங்கள் | ராகம் | பக்கம் |
|---|---|---|
| அடியார்க்கிணை உண்டோ | பேகடா | 106 |
| அண்டசராசர | சலோகமெட்டு | 55 |
| அரங்கத்து நாதனை | கரஹரப்ரியா | 102 |
| அக்ஷீண கருணாநிதே | ஸஹானா | 41 |
| ஆனந்த தாண்டவ நடேசம் | கமாஸ் | 83 |
| இத்தரணிதன்னில் உண்டோ | கமாஸ் | 103 |
| இன்னமும் உறக்கம்தானோ | ஸஹானா | 105 |
| எங்கெங்கு நோக்கினும் | தர்பார் | 108 |
| எண்ணி எண்ணிப் பார்க்க மனம் | உஸேனி | 108 |
| என்று தணியும் என் தன் | அடாணா | 102 |
| என்ன பாக்யம் செய்தாளோ | தோடி | 105 |
| ஏகாம்ரேச்வரம் | ஹரிகாம்போதி | 76 |
| ஓம்கார கணபதிம் பாவயே | ஹம்ஸத்வனி | 59 |
| கடாக்ஷிதோஸ்மி | மாயாமாளவகௌளை அல்லது ஶ்ரீராகம் | 75 |
| கண்ணாரக் காணவேண்டும் | காம்போதி | 104 |
| கருணாபயோநிதே | ஆனந்தபைரவி | 48 |
| கஸ்தூரி ரங்கபதே | பைரவி | 43 |
| கஜவரவதனம் | உமாபரணம் | 1 |
| கஜாரண்யநாதம் | கேதாரகௌளம் | 68 |
| குங்கும கேஸர | பூர்விகல்யாணீ | 12 |
| குணசீலபுரவாஸ | ஸாவேரீ அல்லது மோஹனம் | 63 |
| சரணயுகம் தவ | கீர்வாணீ | 49 |

| | | |
|---|---|---|
| சிந்தயாம்யஹம் சக்திதரம் | தன்யாசி | 66 |
| ஜயவிஜயீபவ தேவாதிதேவ | அடாணா | 26 |
| ஜயவிஜயீபவ ரங்க முராரே | ஸிந்துபைரவி | 38 |
| தண்டனிட்டேனுன்னையே | ஆனந்தபைரவி | 110 |
| தீனவத்ஸம் மாம் பாஹி | சுத்த பங்காளா | 97 |
| நிருபம ஸுந்தராங்க | ஹிந்தோளம் | 39 |
| பங்கஜேக்ஷண ஸுந்தரானன | பூபாளம் அல்லது பௌளை | 5 |
| பரிபாலயமாம் | ரீதிகௌளை | 28 |
| பரிமள ரங்கபதே | நாட்டை | 93 |
| பரிமள ரங்கேசம் பஜ | ரஞ்ஜனீ | 46 |
| பர்வத வர்த்தினி | செஞ்சுருட்டி | 81 |
| பாலகிருஷ்ணம் பாவயேஹம் | ஆபோகி | 86 |
| பாலயமாம் ஸ்ரீபஞ்சமஹாதேவி | முகாரி | 71 |
| பாலயமாம் ஸ்ரீ ஜானகீரமண | அஸாவேரீ | 84 |
| பாஹிமாம் ஸ்ரீரங்கநாயக | மத்யமாவதீ | 23 |
| பூஜ்யம் ரங்கராஜம் | ப்ருந்தாவனஸாரங்கா | 30 |
| ப்ரணமாம்யஹம் ப்ராணநாயகம் | உதயரவிசந்திரிகா | 9 |
| மதுராபுரீ நாயிகே | காம்போதி | 78 |
| மனோமோஹன ரங்கபதே | சுத்தஸாவேரீ | 15 |
| மன்மத மோஹன ரங்கம் | கரஹரப்ரியா | 22 |
| மாம்பாஹி அகிலாண்டேச்வரி | ஸாவேரீ | 73 |
| மீனாக்ஷி முதம் தேஹி | பூர்விகல்யாணீ | 79 |
| மோஹனரங்கபதிமாச்ரய | தோடி | 13 |
| மோஹன ரங்கா மனோமோஹனரங்கா | மோஹனம் | 10 |
| ரங்கநாதன் அடிபணிவாய் | ஸ்ரீரஞ்ஜினீ | 107 |
| ரங்கநாதனையே ஸந்ததம் | காபிநாராயணீ | 107 |
| ரங்கா நீ வேகமாய் வாராய் | யமுனா கல்யாணீ | 106 |

| | | |
|---|---|---|
| ராஜாதி ராஜ ஸ்ரீ | தர்பார் | 18 |
| விஹர மானஸ ரங்கே | சாமா | 45 |
| வெங்கடாத்ரிச்ருங்க வாஸ | பேகடா அல்லது தோடி | 61 |
| சரணம் சரணம் ஸ்ரீ சபரிகிரீசா | ஸௌராஷ்டிரம் அல்லது ஆஹிரீ | 87 |
| சிங்கார ஒய்யார வைபோக ரங்கா | மோஹனம் | 103 |
| ச்யாமளகாத்ர மோஹனரங்கா | கரஹரப்ரியா | 95 |
| ச்ருத ஜன பரிபாலா | பந்துவராளீ | 25 |
| ச்ருங்கார ரஸபூர்ண | ராகமாலிகை | 51 |
| ஸ்ரீ மாத்ருபூதம் | சங்கராபரணம் | 70 |
| ஸ்ரீ ரங்கநாதனுக்கிணையாரும் உண்டோ | சுருட்டி | 110 |
| ஸ்ரீ ரங்கநாயகம் ஆச்ரயாம்யஹம் | காம்போதி | 20 |
| ஸ்ரீ ரங்கநாயகம் சிந்தயாம்யஹம் | ஸரஸாங்கீ | 35 |
| ஸ்ரீ ரங்கநாதனின் பொற்பாத கமலமே | மத்யமாவதி | 109 |
| ஸ்ரீ ரங்கராஜம் ப்ரணதோஸ்மி நித்யம் | சங்கராபரணம் | 89 |
| ஸ்ரீ ரங்கபுர விஹார | பிலஹரி | 7 |
| ஸ்ரீ ரங்க சாயினம் | ஆரபி | 3 |
| ஸ்ரீ ரங்கநாதம் ச்ருதபாரிஜாதம் | ஜனரஞ்ஜனி | 36 |
| ஸ்ரீ ரங்கநாயிகாம் | புன்னாகவராளீ | 100 |
| ஸரஸ ஸல்லாப சதுர | வஸந்தா | 31 |
| ஸார்வபௌம ஸ்ரீ ரங்கநாயக | கன்னடகௌளை | 91 |
| ஸுந்தராங்க ஸ்ரீ ரங்கநாயக | ஸரஸ்வதீ மனோஹரி அல்லது நளினகாந்தி | 33 |
| ஸ்வயமுதித ஸ்ரீ நிவாஸ | பேஹாக் | 64 |
| ஸ்வர்ணமய திவ்ய | கல்யாணீ | 17 |
| க்ஷீரஸாகரோதித | சுருட்டி | 98 |

श्रीरामजयम्

# श्री वैजयन्ती

1

## [दुरितनिवारकविघ्नेश्वर ध्यानम्]

*उमाभरणम्* *आदि*

गजवरवदनं विघ्नविनायकं
कलिमलवारकं चिन्तय सन्ततम् [ग]

भज भज मानस पार्वतीनन्दनं
वेदगीत-नादबोध-भोगमोक्ष-दायकम् [ग]

सकलमन्त्राक्षर-शान्तस्वरूपं
निखिलजगत्प्रभुं निर्मलशोभिनम्
परिजनपालन-निरुपममीश्वरं
भागधेय-पूज्यमान-बालरूप-सुन्दरम् [ग]

अन्तकमारक-शंकरपुत्रं
नन्दितहरिदास-कृतस्तुतिपात्रम्
परमकृपाकर-गुरुगुहपूर्वजं
पापकर्म-जाततीव्र-घोरविघ्न-वारकम् [ग]

உ

# ஸ்ரீ வைஜயந்தீ

1

## வினை தீர்க்கும் வினாயகன் துதி

உமாபரணம் ஆதி

*கஜவர வதனம் விக்ன வினாயகம்*
*கலிமலவாரகம் சிந்தய ஸந்ததம்* (க)

*பஜபஜ மானஸ பார்வதீ நந்தனம்*
*வேத கீத நாத போத போக மோக்ஷ தாயகம்* (க)

ஸகல மந்த்ராக்ஷர சாந்தஸ்வரூபம்
  நிகில ஜகத்ப்ரபும் நிர்மல சோபிநம்
பரிஜனபாலன நிருபமமீச்வரம்
  பாகதேய பூஜ்யமான பாலரூபஸுந்தரம் (க)

அந்தக மாரக சங்கர புத்ரம்
  நந்தித ஹரிதாஸ க்ருதஸ்துதி பாத்ரம்
பரமக்ருபாகர குருகுஹ பூர்வஜம்
  பாபகர்ம ஜாததீவ்ர கோரவிக்ன வாரகம் (க)

மேலான யானை முகத்துடன் கூடியவரும், கலிகாலத்தின் தீய சக்திகளைத் தடுத்து நிறுத்தி நமது இடர்களையெல்லாம் போக்கவல்ல ஸ்ரீ விநாயக மூர்த்தியை இடைவிடாது கருத்திற் கொள்வீராக.

பார்வதி அன்னையின் மனதிற்கிசைந்தவரும், மறைகளின் ஒலிகளின் மூலம் தெளிவாக்கப்பட்ட இம்மை, மறுமை இவ்விரண்டிற்கும் உகந்த மேலான நற்பயன்களை அளிக்கவல்ல அவரைத் துதிப்பீராக.

எல்லா மந்திரங்களின் அடிப்படை அக்ஷரத்தின் (பிரணவத்தின்) உருவத்துடன் கூடிய அவர் அமைதியான தோற்றத்துடன் விளங்குபவர். அகில உலக நாயகனானஅவர் சுத்தமான ஒளியுடன் காட்சி அளிப்பவர். மேலான துதிகளுக்கு ஏற்ற அவர் இளம் குழந்தையுடைய வடிவத்துடன் அண்டியவர்களை அருள்பாலிப்பதில் இணையற்றவர்.

காலனை வென்ற சங்கரரின் மைந்தரான அவர் ஹரிதாஸர்களின் துதிகளுக்கு ஏற்றவர். கருணையே வடிவான முருகப்பெருமானுக்கு முதல்வோன் ஆவார். நாம் முன் செய்துள்ள கடுமையான தீய செயல்களின் விளைவால் தோன்றிடும் எல்லாவித இடையூறுகளையும் நீக்க வல்லவர்.

## 2

## [क्षेत्र माहात्म्यम्]

*आरभि* *आदि*

श्रीरङ्गशायिनं श्रितफलदायकं
  श्रीरमानायकं हृदि चिन्तयेहम् [श्री]

सुरपतिवन्दित-नरवरवेषं
  वरमुनिभावित-विरहितदोषम् [श्री]

कुम्भजवाहिनी-तीरविहारं
अम्बुजलोचन-मङ्गलगात्रम्
इन्दुकलाधर-शंकरमित्रं
नन्दितनिजजन-पालनचतुरम् [श्री]

मन्दाराम्बुज-हारविराजितं
मञ्जीरपदयुग-नटनमनोहरम्
गोपवधूपरिरम्भणलोलं
गोकुलबृन्दावन-परिपालम् [श्री]

सन्मणिविलसित-सुन्दररूपं
दिनमणिवंशज-पूज्यप्रतापम्
किन्नरजनगण-सन्नुतचरणं
प्रमुदितहरिदास-कीर्तितवैभवम् [श्री]

## 2

## தலப்பெருமை

ஆரபி தாளம்: ஆதி

*ஸ்ரீரங்கசாயினம் ச்ருத பலதாயகம்*
*ஸ்ரீரமாநாயகம் ஹ்ருதி சிந்தயேஹம் (ஸ்ரீ)*

*ஸுரபதிவந்தித நரவரவேஷம்*
*வரமுனி பாவித விரஹித தோஷம் (ஸ்ரீ)*

*கும்பஜவாஹினீ தீர விஹாரம்*
*அம்புஜ லோசன மங்களகாத்ரம்*
*இந்துகலாதர சங்கர மித்ரம்*
*நந்தித நிஜஜன பாலன சதுரம் (ஸ்ரீ)*

*மந்தாராம்புஜ ஹார விராஜிதம்*
*மஞ்ஜீர பதயுக நடனமனோஹரம்*
*கோபவதூ பரிரம்பண லோலம்*
*கோகுல ப்ருந்தாவன பரிபாலம் (ஸ்ரீ)*

ஸன்மணி விலஸித ஸுந்தர ரூபம்
    தினமணிவம்சஜ பூஜ்ய ப்ரதாபம்
கின்னரஜனகண ஸந்நுத சரணம்
    ப்ரமுதித ஹரிதாஸ கீர்த்தித வைபவம் (ஶ்ரீ)

திருவரங்கத்தில் படுத்த திருக்கோலத்தில் காட்சியளித்துக் கொண்டே திருமகளுடன் கூடி நமக்கு வேண்டிய நற்பயன்களை நல்கிவரும் அரங்கனை மனதில் சிந்தனை செய்கிறேன்.

அவன் தேவேந்திரன் முதலோர்களால் வணங்கி வேண்டப்பட்டு மானிட உருவத்தில் உத்தமனாக உலகத்தில் உதித்தவன். தவத்தில் சிறந்த முனிவர்களும் போற்றும் தூயவன்.

தாமரையை யொத்த கண்களுடனும், சிறந்த திருமேனியுடனும் கூடிய அவன், குடத்தில் உதித்து பெருக்கெடுத்துவரும் காவிரியின் கரைகளில் திருவிளையாடல்கள் புரிபவன். மதியை மகுடத்தில் தாங்கிடும் சங்கரனின் உற்ற தோழன். அண்டியவர்களைப் பாதுகாக்கும் பணியில் திறமை வாய்ந்தவன்.

மந்தாரை, தாமரை போன்ற மலர்களாலான அழகியமாலைகள் அணிந்து, சிலம்புகள் ஒலிக்கும் திருப்பாதங்களுடன் நடனங்களாடி, ஆயச்சிறுமியர்களை அணைந்துகொண்டு களியாட்டங்கள் புரிபவன். கோகுலத்தையும், பிருந்தாவனத்தையும் காத்தருள்பவன்.

தூய்மையான ரத்தினங்களின் ஒளியுடன் அழகே உருக்கொண்டு விளங்குபவன். சூரிய குலத்தில் தோன்றிய ஶ்ரீராமனால் வணங்கப்பட்ட மேன்மைகளுடையவன். மனம் கனிந்த ஹரிதாஸர்களால் போற்றப்படும் அருமை பெருமைகளுடன் கூடியவன்.

3

## [सुप्रभात वर्णनम्]

भूपाळम् या बौलै    मिश्रम

पङ्कजेक्षण सुन्दरानन सुप्रभातमिदं तव
    अप्रमेयकटाक्षवीक्ष कृपांकुरुष्व जनार्दन

पाहि माधव रङ्गनायक पाहि माधव पाहि
    पाहि माधव रङ्गनायक पाहि माधव पाहि [पा]

शङ्खनाद सुघोषितंच वाद्यदुन्दुभियुतं शुभं [पा]
तत्तताळ-मृदङ्गसहित-वल्लकीस्वनमुत्तमम्

देवदानव-यक्ष-किन्नर-सिद्धचारण-गन्धर्वाः
सकलयोगि-मुनीन्द्रवर्या दर्शनार्थमिहागताः
सह्यजा-गङ्गादिसर्व-पुण्यतीर्थसुसेवितं
सप्तसागरपूतसज्जलं पूजनार्थमिहाहृतम् [पा]

गन्धयुक्तसुवासितञ्च दिव्यचन्दनमनुपमं
मङ्गळाङ्गविलेपनाय सादरेण समर्पितम्

मल्लिकाभिरम्यवकुळ- पारिजातसमन्वितं
पल्लवानि परिकल्पितानि च मालिकान्यपि स्वीकुरु [पा]

अरुणभास्कर-किरणसदृश-सरसचूतफलान्वित
नारिकेलकपित्थकदली-पनसजम्बूफलान्यपि
शर्करामधुमिश्रितान्नं स्वादुक्षीरसमन्वितं
सरसहरिदासकल्पितं स्वीकुरुष्व सुरोत्तम [पा]

## 3

## தூயவன் துயிலெழுப்புதல்

பூபாளம் பௌளை — மிச்ரசாபு

*பங்கஜேக்ஷண ஸுந்தரானன ஸுப்ரபாதமிதம் தவ*
*அப்ரமேய கடாக்ஷவீக்ஷ க்ருபாம்குருஷ்வ ஜனார்தன*
*பாஹிமாதவ ரங்கநாயக பாஹி மாதவ பாஹி (பா)*

*சங்கநாத ஸுகோஷிதஞ்ச வாத்ய துந்துபியுதம் சுபம்*
*தத்ததாள ம்ருதங்கஸஹித வல்லகீஸ்வனமுத்தமம் (பா)*

*தேவதானவ யக்ஷகின்னர ஸித்த சாரண கந்தர்வா:*
*ஸகலயோகி முனீந்த்ரவர்யா தர்சனார்த்தமிஹாகதா:*
*ஸஹ்யஜா கங்காதிஸர்வ புண்யதீர்த்த ஸுஸேவிதம்*
*ஸப்தஸாகர பூதஸஜ்ஜலம் பூஜனார்த்தமிஹாஹ்ருதம் (பா)*

*கந்தயுக்த ஸுவாஸிதஞ்ச திவ்யசந்தனமநுபமம்*
*மங்களாங்க விலேபனாய ஸாதரேண ஸமர்ப்பிதம்*

மல்லிகாபிரம்யவகுள பாரிஜாத ஸமன்விதம்
பல்லவானி பரிகல்பிதானிச மாலிகாமபி ஸ்வீகுரு (பா)

அருணபாஸ்கர கிரணஸத்ருச ஸரஸகூத பலான்வித
நாரிகேலகபித்தகதலீ பனஸஜம்பூபலான்யபி
சர்கராமதுமிச்ரிதான்னம் ஸ்வாதுக்ஷீரஸமன்விதம்
ஸரஸஹரிதாஸ கல்பிதம் ஸ்வீகுருஷ்வ ஸுரோத்தம (பா)

தாமரை போன்ற கண்களுடையவனே! அழகு வாய்ந்த திருமுகத்துடன் விளங்கும் அரங்கா! இதோ நல்ல முறையில் பொழுது புலர்ந்துள்ளது. உனது சிறந்த கடாக்ஷத்தை எங்கள் மீது செலுத்தி கிருபை புரிவாயாக.

இப்பொழுது மேலான சங்கங்களின் ஒலி பரவுகிறது. மங்கள வாத்யஙகள் முழங்குகின்றன. தாளக்கட்டுடன் கூடிய மிருதங்கத்வனி வீணையின் இனிய நாதத்துடன் கலந்து மிதந்து வந்துகொண்டிருக்கிறது. மாதவா! அரங்கா! உமது சிறந்த கடாக்ஷத்தை எங்கள்மீது செலுத்தி எங்களைக் காப்பாயாக.

தேவர்கள், அசுரர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள், கந்தர்வர்களின் குழாங்களும், மேலான யோகிகளும், தவத்தில் சிறந்தவர்களும் உம்மை தரிசிக்க வந்துள்ளார்கள். காவிரீ, கங்கை முதலிய புண்ணிய நதிகளின் சேர்க்கையால் புனிதமடைந்த ஏழு பெருங்கடல்களிலிருந்தும் தீர்த்தம் உமது ஆராதனத்திற்காக கொண்டுவரப்பட்டு தயாராக உள்ளது. மாதவா! அரங்கா! உமது சிறந்த கடாக்ஷத்தை எங்கள் மீது செலுத்தி எங்களைக் காப்பாயாக.

இயற்கை நறுமணங்களுடன் கூடியதும், வாசனைப் பொருள்கள் கலப்புடன் கூடிய உயர்ந்த சந்தனம் உம்முடைய மேலான அவயவங்களில் பூசப்படுவதற்கு தயாராக வைக்கப்பட்டுள்ளது. மல்லிகை, மகிழம்பூ, பாரிஜாதம் முதலிய மலர்களால் தயாரிக்கப்பட்ட மாலைகளை ஏற்றுக்கொள்வீராக. ஏ மாதவா! அரங்கா! உமது மேலான கடாக்ஷத்தை எங்கள் மீது செலுத்தி எங்களைக் காப்பாயாக.

தேவர்களுக்கெல்லாம் மேலான தேவனே! இளம்பரிதிக்கொப்பான காந்தியுடன் கூடியதும், சுவைமிகுந்ததுமான மாங்கனிகள், தேங்காய், விளாம்பழம், வாழை, பலா, நாவல், கனிவகைகளையும், ருசியுடன் கூடிய பால், சர்க்கரை சேர்ந்து பக்தியுடன் ஹரிதாஸர்கள் தயாரித்தளிக்கும் க்ஷீரான்னத்தையும் (பாலமுதையும்) ஏற்றுக்கொள்வீராக. ஏ மாதவா! அரங்கா! உமது சிறந்த கடாக்ஷத்தை எங்கள் மீது செலுத்தி எங்களைக் காத்தருள்வாயாக.

4

## [विश्वरूप वैभवम्]

*बिलहरी* *आदि*

श्रीरङ्गपुरविहार हरे रङ्ग
भक्तान्तरङ्गचोर हरे रङ्ग [श्री]

तुङ्गकावेरीतीर - रमणीयदेशे
शृङ्गविभूषित - स्वर्णविमाने [श्री]

मन्दारमालाधर सुगन्धकस्तूरीतिलक
वन्दारुजनमन्दार वन्दितमुनिबृन्द
पूर्णचन्द्रानन चारुमन्दहास
परमकल्याणगुण - परिजनोल्लास [श्री]

कमलामनःकान्त कौस्तुभभूष
कामितदायक कमनीयविग्रह
वनमालाधर वारिजनेत्र
विमलहरिदास - हृदयसञ्चार [श्री]

4

## அண்டமாம் சோதி அழகு

பிலஹரி ஆதி

*ஸ்ரீரங்கபுரவிஹார ஹரேரங்க*
*பக்தாந்தரங்க சோர ஹரேரங்க* *(ஸ்ரீ)*

*துங்ககாவேரீதீர ரமணீய தேசே*
*ச்ருங்கவிபூஷித ஸ்வர்ண விமானே* *(ஸ்ரீ)*

*மந்தார மாலாதர ஸுகந்தகஸ்தூரீ திலக*
*வந்தாருஜனமந்தார வந்திதமுனிப்ருந்த*
*பூர்ணசந்த்ரானன சாருமந்தஹாஸ*
*பரமகல்யாணகுண பரிஜனோல்லாஸ* *(ஸ்ரீ)*

கமலாமன: காந்தா கௌஸ்துபபூஷ
காமிததாயக கமனீய விக்ரஹ
வனமாலாதர வாரிஜநேத்ர
விமலஹரிதாஸ ஹ்ருதயஸஞ்சார (ஸ்ரீ)

தெளிந்த நீர் பெருக்குடன் கூடிய காவிரியின் கரையில் மனதைக்கவரும் திட்டில் அமைந்துள்ள அரங்க மாநகரில் பொன்மயமான விமானத்தில் வீற்றிருந்து திருவிளையாடல்கள் பல புரிந்து அன்பர்கள் மனதைக் கொள்ளை கொள்ளும் அரங்கா!

மந்தார மாலையணிந்து கொண்டு, கஸ்தூரி பொட்டுடன் கம்பீரமாய் விளங்குபவனே! முனிவர்களால் வணங்கப்பட்டு, அண்டியவர்களுக்கு எல்லையிலாக் களிப்பூட்டக்கூடியவனே! நிறைமதியொத்த அழகிய புன்னகை தவழும் முகத்தாலும் உன்னுடைய குணச்சிறப்புகளாலும் அன்பர்களுக்கு ஆனந்தமளிப்பவனே!

திருமகள் மனதிற்கினியவனே! கௌஸ்துப மணிமாலை பூண்டுள்ளவனே! மனதைக்கவரும் அழகிய உருவம் படைத்தவனே! வேண்டிய நற்பயன்களை அளிப்பவனே! ஹரிதாஸர்களின் தூய உள்ளங்களில் உலாவருபவனே!

5

## [रत्नकिरीटधारी श्रीरङ्गेश सौन्दर्यम्]

उदयरविचन्द्रिका — आदि

प्रणमाम्यहं प्राणनायकं
मङ्गलाकारं कोमलाङ्ग रङ्गम् [प्र]

पूर्णान्तरङ्गे - भ्राजमानरूपं
बिम्बाधरोष्टं स्मितचारुवक्त्रम् [प्र]

लसद्रत्नमुक्ता - किरीटोत्तमाङ्गं
चलत्कुण्डलेनोज्ज्वलत्कर्णकम्
पदपङ्कजश्री - जितपञ्चबाणं
वदनारविन्दं नयनाभिरामम् [प्र]

शुभवनमाला - वरकान्तियुक्तं
श्रितपारिजातं चारुपङ्कजाक्षम्

धृतशंखचक्रं करिराजपक्षं
हरिदासस्तुत - करुणाकटाक्षम् [प्र]

5

## மணிமகுடம் தாங்கும் மணிவண்ணன்

உதயரவிசந்த்ரிகா ஆதி

*ப்ரணமாம்யஹம் ப்ராணநாயகம்*
*மங்களாகாரம் கோமளாங்கரங்கம் (ப்)*

*பூர்ணாந்தரங்கே ப்ராஜமானரூபம்*
*பிம்பாதரோஷ்டம் ஸ்மிதசாருவக்த்ரம் (ப்)*

*லஸத்ரத்னமுக்தா கிரீடோத்தமாங்கம்*
*சலத்குண்டலேனோஜ்வலத் கர்ணகம்*
*பதபங்கஜஸ்ரீ ஜிதபஞ்சபாணம்*
*வதனாரவிந்தம் நயனாபிராமம் (ப்)*

*சுபவனமாலா வரகாந்தியுக்தம்*
*ச்ரிதபாரிஜாதம் சாருபங்கஜாக்ஷம்*
*த்ருதசங்கசக்ரம் கரிராஜபக்ஷம்*
*ஹரிதாஸஸ்துத கருணாகடாக்ஷம் (ப்)*

*அழகிய அவயவங்கள் கொண்டவனும், மங்களகரமான உருவம் படைத்தவனும் எனது உயிருக்கு உயிர் நாயகனுமான அரங்கனை வணங்குகிறேன்.*

*உள்ளத்தில் அடித்தளத்தில் (நீக்கமற) நின்று கோவை செவ்வாயுடனும், இனிய புன்முறுவல் பூத்த முகத்துடனும் ஒளி வீசிக் கொண்டிருக்கும் அவனை நான் வணங்குகிறேன்.*

*அவன் ஜொலிக்கும் ரத்னங்கள் முத்துக்களாலான மணிமகுடத்தை முடி மீது தாங்குபவன் - சுடர்விட்டுக் கொண்டிருக்கும் மணி குண்டலங்களால் சிறந்து விளங்கும் காதுகளையுடையவன். திருப் பாதங்களின் அழகினாலேயே மன்மதனை வென்று கண்களுக்கு களிப்பூட்டும் தாமரை போன்ற திருமு[illegible]ம் படைத்தவன்.*

மேலான காந்தியுடன் விளங்கும் வனமாலையணிந்து கொண்டு அழகிய கண் பார்வைகள் கொண்ட அவன் அண்டியவர்களுக்கு தேவ லோகத்து பாரிஜாத மரம் போன்றவன். கஜேந்திரனுக்காக சங்கம், சக்கரம் இவற்றைக் கையிலேந்தி கருணை நிறம்பிய கண்களுடன் காட்சியளிப்பவன். ஹரிதாஸர்களால் துதிக்கப்படும் அவனை நான் வணங்குகிறேன்.

## 6

## [मोहनरङ्गपति निरुपमलावण्यम्]

*मोहनम्* *आदि*

मोहनरङ्ग मनो -
    मोहन रङ्ग [मो]

सहस्रफणाधर - लम्बितमणिगण -
    अजस्रसेवाऽनन्त – प्रतिबिम्बितवदन [मो]

सान्द्रपयोधर - समुदितगात्र
    पङ्कजदळनिभ - प्रफुल्लितनेत्र
अञ्जनवासित - अळकश्रृङ्गार
    कोमळकस्तूरी - तिलकगंभीर [मो]

[मध्यमकालः]

श्रुतिस्मृतिपुराण - आगमसञ्चार
    श्रितपरिपालन - सन्ततततत्पर
श्रीरमाकुचपरि - रम्भणविहार
    प्रमुदितहरिदास - कृतस्तुतिपात्र [मो]

## (6)

## பள்ளிகொண்ட பரமனின் எல்லையில்லை எழில்

மோஹனம் ஆதி

*மோஹன ரங்க*
    *மனோமோஹன ரங்க* *(மோ)*

*லஹஸ்ரபணாதர லம்பித மணிகண*
*அஜஸ்ரஸேவா 'ஸனந்த ப்ரதிபிம்பிதவதந* (மோ)

*ஸாந்த்ர பயோதர ஸமுதிதகாத்ர*
*பங்கஜதளநிப ப்ரபுல்லிதநேத்ர*
*அஞ்ஜனவாஸித அளகச்ருங்கார*
*கோமளகஸ்தூரீ திலக்கம்பீர*

**மத்யமம்**

*ச்ருதிஸ்ம்ருதி புராண ஆகமஸஞ்சார* (கோ)
*ச்ருதபரிபாலன ஸந்ததத்பர*
*ஸ்ரீரமாகுசபரிரம்பணவிஹார*
*ப்ரமுதித ஹரிதாஸ க்ருதஸ்துதிபாத்ர* (மோ)

*மனதினைக் கொள்ளை கொள்ளும் அரங்கா!*

*இடைவிடாது உனக்கு பணிவிடைகள் செய்து கொண்டிருக்கும் ஆதிசேஷனுடைய படமெடுத்த ஆயிரக் கணக்கான தலைகளின்று தொங்கும் ரத்னங்களில் ப்ரதிபலிக்கும் அழகிய உருவம் கொண்டவனே!*

*அடர்த்தியான கார்மேகங்களுக்கிணையான அவயவங்களின் சேர்க்கையுடன் கூடியவனே! மலர்ந்த திருத்தாமரைகளுக் கொப்பான அலர்ந்த விழிகளைக் கொண்டுள்ளவனே! தைலப் பூச்சுகளுடன் கூடியவனே. இயற்கையாக நறுமணம் வீசும் குழற்கற்றைகள் அமையப் பெற்றவனே. அழகான கஸ்தூரி பொட்டுடன் மேலானலக்ஷணங்களுடன் காட்சி அளிப்பவனே!*

*வேதங்கள், அவற்றின் துணை நூல்கள், புராணங்கள், இதிகாஸங்கள் இவற்றில் எப்பொழுதும் உலாவிக் கொண்டிருப்பவனே! அண்டியவர்களைக் காப்பதை எப்பொழுதும் கருத்தில் கொண்டிருப்பவனே! திருமகளை மார்புரத்தழுவி ஆனந்த மடைபவனே! உள்ளப் பூரிப்படைந்த ஹரிதாஸர்களின் துதிகளுக்கு இலக்கானவனே!*

## 7

## [पुष्पालङ्कृत मोहनरङ्गपति सौन्दर्यम्]

*पूर्विकल्याणी* *आदि*

**कुङ्कुमकेसर - वासितदेह**
**कोमळकस्तूरी - विलसिततिलक** [कु]

शंकरद्रुहिणादि - मानसरञ्जक
मणिगणभूषित - मोहनरङ्ग [कु]

अरुणकिरणमय - विराजितचेल
वरकुसुमान्वित - कनकदुकूल
पूर्णचन्द्रानन धृतवनमाल
पुण्डरीकनयन पङ्कजवल्लीलोल [कु]

वैनतेयविबुध - वन्दितवरेण्य
सनकमहामुनि - सन्नुतचरण
पन्नगभूषित - मण्डपशयन
प्रमुदितहरिदास - भाग्यवितरण [कु]

## 7

## மலர் சூடும் மணாளன்

பூர்விகல்யாணி ஆதி

*குங்கும கேஸர வாஸித தேஹ*
*கோமளகஸ்தூரீ விலஸித திலக (கு)*

*சங்கர த்ருஹிணாதி மானஸ ரஞ்ஜக*
*மணிகணபூஷண மோஹனரங்க (கு)*

*அருணகிரணமய விராஜிதசேல*
*வரகுஸுமான்வித கனகதுகூல*
*பூர்ணசந்த்ரானன த்ருதவனமால*
*புண்டரீகநயன பங்கஜவல்லீலோல (கு)*

*வைனதேய விபுத வந்தித வரேண்ய*
*ஸனக மஹாமுனி ஸந்நுத சரண*
*பன்னகபூஷித மண்டப ஸதந*
*ப்ரமுதித ஹரிதாஸ பாக்யவிதரண (கு)*

*குங்குமப்பூவின் நறுமணத்துடனும், அழகு வாய்ந்த கஸ்தூரிப் பொருட்டுடனும் ஒளிவீசும் அரங்கா!*

*அரன், அயன் முதலியவர்களின் மனதிற்கு களிப்பூட்டும் தோற்றத்துடன் உயர்ந்த ரத்தினங்களிழைத்த அணிகலங்களுடன் சிறந்து விளங்குபவனே!*

இளம் பரிதியின் ஒளிக்கு சமமான ஆடையுடனும், மேலான மலர்களால் அலங்கரிக்கப்பட்ட தங்கமயமான போர்வையுடனும் பிரகாசிப்பவனே: வனமாலை அணிமார்புடனும், நிறை மதியையொத்த உனது திருமுக மண்டலத்தில் விளங்கும் தாமரைக் கண்களுடனும் பங்கயச்செல்விக்கு களிப்பூட்டுபவனே!

கருடன் முதலிய நித்யர்களால் வணங்கப்பட்ட மேலோனே! ஸனகர் முதலில் பெரும் முனிவர்களால் போற்றப்படும் திருவடித் தாமரைகளுடன் கூடியவனே! ஆதிசேஷனான அரவத்தால் அலங்கரிக்கப்பட்ட மண்டபத்தைச் சார்ந்து ஹரிதாஸர்களுக்கு எல்லாவித பாக்யங்களையும் அருள்பவனே!

8

## [मोहनरङ्गेशस्य परममनोहर रूपम्]

*तोडी* | *मिश्रचा*

मोहन-रङ्गपतिमाश्रय
हे मानस [मो]

मोहितमुनिगण - पालिताऽखिलभुवनं
लालितहरिदास - सेवितपदयुगळम् [मो]

घोरनिशाचर - मण्डलभीमं
आश्रितरक्षण - नित्यपरायणम्
श्रीरमामुखस्मेर - चन्द्रचकोरं
परमानन्द - देवामृतवर्षकम् [मो]

कमलमुखोपरि - तरळितकेशं
विमलबिम्बाधर - विलसितहासम्
कान्तिमयदिव्य-कस्तूरीतिलकं
शान्तिसुधारस - विस्फारितनेत्रम् [मो]

8

## மோகனத் திருக்கோலம்

தோடி | மிச்ரசாபு

மோஹனரங்கபதி மாச்ரய
ஹே மானஸ (மோ)

மோஹிதமுனிகண பாலிதாகிலபுவனம்
லாலிதஹரிதாஸ ஸேவிதபதயுகளம் (மோ)

கோரநிசாசர மண்டலபீமம்
ஆச்ரிதரக்ஷண நித்யபராயணம்
ஸ்ரீரமாமுகஸ்மேர சந்த்ரசகோரம்
பரமானந்த தேவாம்ருதவர்ஷகம் (மோ)

கமலமுகோபரி தரளிதகேசம்
விமலபிம்பாதர விலஸிதஹாஸம்
காந்திமயதிவ்ய கஸ்தூரீ திலகம்
சாந்திஸுதாரஸ விஸ்பாரிதநேத்ரம் (மோ)

ஏ மனமே! மோகன ரங்கனைத் துதிப்பாயாக

அவன் முனிவர்கள் உள்ளங்களைக் கவர்ந்தவன். உலகங்களனைத்தையும் காப்பவன். தன்னால் அன்புடன் அரவணைக்கப்படும் ஹரிதாஸர்களால் பணிவிடைகள் செய்யப்படும் திருவடிகளைக் கொண்டவன்.

கொடிய அரக்கர்கள் கூட்டங்களை பயத்தால் நடுநடுங்கச் செய்பவன். அதே சமயத்தில் தன்னை அண்டியவர்களைக் காப்பதில் எப்பொழுதும் கண்ணும் கருத்துமாக உள்ளவன். இனிய புன்னகை பூத்த திருமகனின் முகமண்டலமாகிய சந்திரனை எப்பொழுதும் எதிர் நோக்கியிருக்கும் சக்ரவாகப் பறவைகள் போன்றவன். தேவலோகத்து அமிர்தத்திற்கொப்பான ஆனந்தத்தை எப்பொழுதும் பொழிந்து கொண்டிருப்பவன்.

தாமரை போன்ற முகத்தின் மீது அலையெனத் தவழ்ந்திடும் குழல்கற்றைகளுடனும், கோவைப்பழம் போன்ற உதடுகளில் அரும்பிடும் இள நகைக் காந்தியுடன் விளங்குபவன். ஒளி வீசும் ஒப்பற்ற கஸ்தூரிப் பொட்டுடனும், சாந்தரஸம் (அமைதி) நிரம்பிய மலர்ந்த கண் பார்வைகளுடனும் தோற்றமளிப்பவன்

(ஏ மனமே! இப்படிப்பட்ட அரங்களைத் துதிப்பாயாக)

## 9

## [गरुडारूढ श्रीरङ्गपति वैभवम्]

*शुद्धसावेरी* *मिश्रम्*

मनोमोहन - रङ्गपते
मृदुपादारविन्दमेव गतिस्ते [म]

दिनकरकोटि-लावण्य
वदनारविन्द - वरेण्य [म]

मारजनक - सुकुमार - मोहन
श्रीरमामनःकुमुद - शरदिन्दुवदन
अमरेन्द्रगणैस्स्तुत्य - अमितपराक्रम
शरणागतत्राण - उरगेन्द्रशयन [म]

मकरकुण्डलधर - मनोहरवक्त्र
करुणारसपर - अरविन्दनेत्र
गरुडगमनवर - कमनीयगात्र
हरिदासमदावली कृतस्तुतिपात्र [म]

## கருடன் மீதுலாவும் கார்மேனியன்

சுத்தஸாவேரி மிச்ரசாபு

*மனோமோஹன ரங்கபதே*
*ம்ருதுபாதாரவிந்தமேவ கதிஸ்தே (ம)*

*திநகரகோடி லாவண்ய*
*வதனாரவிந்த வரேண்ய (ம)*

*மாரஜனகஸுகுமார மோஹன*
*ஸ்ரீரமாமன:குமுத சரதிந்துவதன*
*அமரேந்த்ரகணைஸ்ஸ்துத்ய அமிதபராக்ரம*
*சரணாகதத்ராண உரகேந்த்ரசயண (ம)*

மகரகுண்டலதர மனோஹரவக்த்ர
கருணாரஸபரஅரவிந்தநேத்ர
கருடகமனவர கமனீயகாத்ர
ஹரிதாஸ பதாவளீ! க்ருதஸ்துதிபாத்ர (ம)

மனைதக் கொள்ளை கொள்ளும் அரங்கா! உம்முடைய மென்மையான திருவடிகளே எனக்கு ஒரே கதி!

கோடிக்கணக்கான சூரியர்களின் ஒளியுடன் பிரகாசிப்பவனே! உன்னுடைய அழகான திருமுகத்தாமரையின் பொலிவுடன் எல்லோருக்கும் மேலானவனாக விளங்குபவனே!

மன்மதனையே ஈன்ற வசீகரமான தோற்றமுடையவனே! திருமகள் மனதாகிற ஆம்பல் மலருக்கு சரத்கால சந்திரன் போல் இன்பம் அளிப்பவனே! தேவர்களால் போற்றப்பட்ட மேலான பராக்ரமம் பொருந்தியவனே! பாம்பணையில் பள்ளி கொள்ளும் பரமனே! தஞ்சம் புகுந்தவர்களைக் காத்தருள்பவனே!

மகரகுண்டலங்களுடன் விளங்கும் அழகிய திருமுகம் படைத்தவனே! கருணையைச் சொரியும் தாமரைக் கண்ணனே! கருடன் மீதமர்ந்து கம்பீரமாக நடைபோட்டுவரும் வசீகரமான மேனியழகு கொண்டவனே! ஹரிதாஸர்கள் துதிகளுக்கு இலக்கானவனே!

(உம்முடைய மென்னமையான திருவடிகளே எனக்கு ஒரே கதி.)

## 10

## [कावेरीसेवित श्रीरङ्गपति वैभवम्]

*कल्याणी* *आदि*

स्वर्णमयदिव्य - वेदविमानश्रृङ्ग
दिनकरद्युतिकर - मणिमण्डपसदन [स्व]

पावनकावेरी - पवनचलितलहरी -
प्रणतचरणहरे भुवनमोहनकारिन् [स्व]

अमलकमलदळ - कोमळवदन
करुणारसपरि - पूरितनयन
मन्मथमोहन - मानसरञ्जक
वाञ्चितफलप्रद - मङ्गळचरण [स्व]

गजराजभक्तादि - वन्दितपदयुग
    विजयप्रसादित - ज्ञानरसामृत
कलिकलुषज्वर - खण्डनधीर
    पालितहरिदास - मानससञ्चार                [स्व]

## 10

## காவிரி வழிபடும் கமலக்கண்ணன்

கல்யாணி                                                  ஆதி

ஸ்வர்ணமய திவ்ய வேதவிமானச்ருங்க
    திநகரத்யுதிகர மணிமண்டபஸதன                (ஸ்)

பாவனகாவேரீ பவனசலிதலஹரீ
    ப்ரணதசரணஹரே புவனமோஹனகாரின்                (ஸ்)

அமலகமலதள கோமளவதன
    கருணாரஸபரி - பூரிதநயன
மன்மதமோஹன மானஸரஞ்ஜக
    வாஞ்சிதபலப்ரத - மங்களசரண                (ஸ்)

கஜராஜபக்தாதி வந்திதபதயுக
    விஜயப்ரஸாதித ஞானரஸாம்ருத
கலிகலுஷஜ்வர கண்டனதீர
    பாலிதஹரிதாஸ மானஸஸஞ்சார                (ஸ்)

நான்கு வேதங்களையும் சிகரங்களாகக் கொண்டு சூரியனைப் போல ஸ்வயம் பிரகாசத்துடன் ஒளி வீசிக் கொண்டிருக்கும் தங்கமயமான விமானத்துடன் கூடிய மண்டபத்தில் உறைபவனே.

மென்மையான காற்றினால் முன்தள்ளப்பட்ட அலைவரிசைகளுடன் கூடிய புனிதமான காவிரியின் நீரால் வணங்கப்படும் பெருமை வாய்ந்தவனே! உலகங்கள் அனைத்தையும் தன் அழகால் வசீகரம் செய்பவனே.

நன்கு மலர்ந்த தாமரை இதழைப் போன்ற முகத்தையுடையவனே. கருணைப்பெருக்கெடுத்து வரும் கண்பார்வைகளுடன் விளங்கு[illegible]னே. மன்மதாகாரமான மோகன உருவத்துடன் மனதிற்கு களிப்பூட்டக் கூடி[illegible]னே. மாந்தர்கள் விரும்பிவேண்டும் எல்லா நன்மைகளையும் பயக்கவல்ல திருவடிகளுடன் கூடியவனே.

கஜேந்திரன் போன்ற பக்தர்களால் வணங்கப்பட்ட திருவடிகளுடன் விளங்குபவனே. அர்ஜுனனுக்கு மேலான ஞானத்தை அருளியவனே. இக் கலியின் விளைவால் ஏற்படும் தீயசக்திகளை ஒடுக்குவதில் ஒப்பற்ற வீரனே, உன்னால் காப்பாற்றப்பட்ட ஹரிதாஸர்களின் மனதுகளில் இடையறாது உலாவிக் கொண்டிருப்பவனே.

## 11

## [राजवैभवयुक्त एकान्तरङ्ग सौन्दर्यम्]

दर्बार् आदि

राजाधिराजश्री - रङ्गराजं भजे
रञ्जिताऽखिलभुवन - कोमलाङ्गं भजे [रा]

राजमान्यरघुकुल - प्रपूजितप्रभुं
तेजसाविलसन्तं दिव्यमङ्गळमूर्तिम् [रा]

सनकादियोगिजन - मानससञ्चारं
कनकादिदिव्यमणि - भूषणालङ्कृतम्
नाकादिराजस्तुत - पुण्यचारित्रं
रसिकहरिदासनुत - रमणीयविग्रहम् [रा]

मन्दारकुसुमभर - शोभितसर्वाङ्गं
नन्दादिभक्तजन - सेवितापाङ्गम्
गोपाङ्गना मनो - मोहनशुभाङ्गं
संगीतरसरसिक - श्रृङ्गाररङ्गम् [रा]

## 11

## பரிமளரங்கன் பவனிவரும் காட்சி

தர்பார் ஆதி

*ராஜாதிராஜஸ்ரீ ரங்கராஜம் பஜே*
*ரஞ்ஜிதாகிலபுவன கோமளாங்கம் பஜே* (ரா)

*ராஜமான்யரகுகுல ப்ரபூஜிதப்ரபும்*
*தேஜஸாவிலஸந்தம் திவ்யமங்களமூர்த்திம்* (ரா)

ஸனகாதியோகிஜன மானஸஸஞ்சாரம்
கனகாதிதிவ்யமணி பூஷணாலங்க்ருதம்
நாகாதிராஜஸ்துத புண்யசாரித்ரம்
ரஸிகஹரிதாஸநுத ரமணீயவிக்ரஹம் (ரா)

மந்தாரகுஸுமபர சோபிதஸர்வாங்கம்
நந்தாதிபக்தஜன ஸேவிதாபாங்கம்
கோபாங்கனாமனோ மோஹனசுபாங்கம்
ஸங்கீதரஸரஸிக ச்ருங்காரரங்கம் (ரா)

மன்னர்களுக்கெல்லாம் மேலான மாமன்னனாயும், தன்னுடைய அழகிய அங்க அவயங்களால் உலகங்கள் அனைத்திற்கும் இன்பமூட்டும் ஸ்ரீரங்கராஜனைப் போற்றுகிறேன்.

உலகத்தை ஆண்ட அரசகுலங்களால் போற்றப்படும் ரகுவம்சத்தினர்களால் வழிபடப்பட்டு, மேலான காந்தியுடன் கூடிய மங்களகரமான உருவத்துடன் பிரகாசிக்கும் ஸ்ரீரங்கராஜனைப் போற்றுகிறேன்.

ஸனகர் போன்ற யோகிகளின் மனதில் எப்பொழுதும் உலாவிக் கொண்டிருப்பவனும், சுத்தமான தங்கம், ரத்தினங்களாலான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவனும், தேவர்களால் இடைவிடாது போற்றப்படும் புண்ணியமான நடத்தையுடையவனும், பரம ரஸிகர்களான ஹரிதாஸர்களால் வணங்கப்படும் வசீகரமான உருவம் படைத்த ஸ்ரீரங்கராஜனைப் போற்றுகிறேன்.

மந்தாரை போன்ற சிறந்த மலர்களால் அலங்கரிக்கப்பட்ட அழகிய அவயவங்களுடன் கூடியவனும், நந்தன் முதலிய பக்தர்களால் போற்றப்படும் பார்வையழகு படைத்தவனும், ஆயச்சிறுமியர்கள் மனதைக் கொள்ளை கொண்ட ரூபலாவண்யமுள்ளவனும், ஸங்கீதத்தின் மேலான ரஸத்தை சுவைக்கும் இனிமையே வடிவான ஸ்ரீரங்கராஜனைப் போற்றுகிறேன்.

## 12

## [श्रीरङ्गदिव्यदम्पत्योः एकान्तसेवा वैभवम्]

काम्भोदी मिश्रम्

**श्रीरङ्गनायकं आश्रयाम्यहं**
**सन्ततं शरणागतवत्सलम्** **[श्री]**

सरसिजनेत्रं चारूसर्वाङ्गं
परममनोहर - नित्यवैभवमूर्तिम् [श्री]

कनकमयदिव्य - मणिगणभूषितं
मनसिजशतकोटि - मोहनरूपम्
कोमळकस्तूरी - तिलकमभ्भीरं
कमलसमुद्भव - नारीमणिलोलम् [श्री]

मन्दाराम्बुज - मल्लिकापल्लव
सुन्दरतुलसी - मालिकालंकृतम्
चन्दनचर्चित - रञ्जितगात्रं
प्रमुदितहरिदास - कामितदायकम् [श्री]

## 12

## திருமகள் கூடி மகிழும் திருவரங்கன்

காம்போதி மிச்ரசாபு

*ஸ்ரீரங்கநாயகம் ஆச்ரயாம்யஹம்*
*ஸந்ததம் சரணாகதவத்ஸலம் (ஸ்ரீ)*

*ஸரஸிஜநேத்ரம் சாருஸர்வாங்கம்*
*பரமமனோஹர நித்யவைபவமூர்த்திம் (ஸ்ரீ)*

*கனகமயதிவ்ய மணிகணபூஷிதம்*
*மனஸிஜசதகோடி மோஹனரூபம்*
*கோமளகஸ்தூரீ திலககம்பீரம்*
*கமலஸமுத்பவ நாரீமணிலோலம் (ஸ்ரீ)*

*மந்தாரம்புஜ மல்லிகாபல்லவ*
*ஸுந்தரதுளஸீ மாலிகாலங்க்ருதம்*
*சந்தனசர்சித ரஞ்ஜிதகாத்ரம்*
*ப்ரமுதிதஹரிதாஸ காமிததாயகம் (ஸ்ரீ)*

*தஞ்சமடைந்தவர்களை அன்புடன் காத்தருளும் ஸ்ரீரங்கநாதனை நான் எப்பொழுதும் நாடுகிறேன்.*

தாமரைக்கண்களுடன் விளங்குபவனும், அழகு மிளிரும் அவயவங்களுடன் கூடியவனும், என்னாளும் குன்றாத வைபவங்களுடன் கூடியவனுமான ஸ்ரீரங்கநாதனை இடைவிடாது நாடுகிறேன்.

அவன் இரத்தினங்கள் பதிக்கப்பட்ட தங்கத்தினாலான மேலான அணிகலங்களால் அலங்கரிக்கப்பட்டு கோடி மன்மதர்களையும் வென்ற கவர்ச்சிகரமான உருவம் படைத்தவன். அழகான கஸ்தூரிப் பொட்டுடன் கம்பீரமாய்த் தோற்றமளிப்பவனும், தாமரையிலுதித்த மங்கையின் மனதிற்கிசைந்தவனுமான ஸ்ரீரங்கநாதனை இடைவிடாதுநாடுகிறேன்.

மந்தாரை, தாமரை, மல்லிகை, துளஸிதளம் இவைகளால் தொடுக்கப்பட்ட மலர் மாலைகளால் அலங்கரிக்கப்பட்டவனும், சந்தனப்பூச்சுடன் கூடிய சரீரகாந்தி கொண்டவனும், ஹரிதாஸர்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனுமான ஸ்ரீரங்கநாதனை இடைவிடாது நாடுகிறேன்.

## 13

## [चित्तचोर श्रृङ्गाररङ्गपति वर्णनम्]

*करहरप्रिया* — *मिश्रम्*

मन्मथ - मोहन - रङ्गं
मनसि विचिन्तय वारं वारम् [म]

इन्द्रादिसुरगण - वन्दितवरेण्यं
कन्दर्पशतकोटि - निरुपमलावण्यम् [म]

आगमनिगमादि - वेदान्तगोचरं
मोहनमुरळी - वादनचतुरम्
श्रृङ्गाररसभर - श्यामळगात्रं
संगीतसाहित्य - आनन्दसारम् [म]

शरदिन्दुसमान - सुन्दरवदनं
करुणारसभर - अरविन्दलोचनम्
योगीन्द्रमानस - सारसहंसं
हरिदासरञ्जक - भुजगेन्द्रशायिनम् [म]

## 13

## உள்ளம் கவரும்கள்வனான அரங்கன்

ஸுரஹரப்ரியா மிச்ரசாபு

மன்மத மோஹனரங்கம்
மனஸிவிசிந்தய வாரம் வாரம் (ம)

இந்த்ராதிஸுரகண வந்திதவரேண்யம்
கந்தர்ப்ப சதகோடி நிருபமலாவண்யம் (ம)

ஆகமநிகமாதி வேதாந்தகோசரம்
மோஹனமுரளீ வாதனசதுரம்
ச்ருங்காரரஸபர ச்யாமளகாத்ரம்
ஸங்கீதஸாஹித்ய ஆனந்தஸாரம் (ம)

சரதிந்துஸமான ஸுந்தரவதனம்
கருணாரஸபர அரவிந்தலோசனம்
யோகீந்த்ரமானஸ ஸரஸஹம்ஸம்
ஹரிதாஸரஞ்சக புஜகேந்த்ரசாயினம் (ம)

மனதை மயக்கிடும் அரங்கனை அடிக்கடி நினைப்பாயாக.

அவன் இந்திரன் முதலிய தேவர்களால் வணங்கப்படும் எல்லோருக்கும் மேலான தேவன். நூறுகோடி மன்மதர்களின் அழகுடன் கூடி தன்னிகரற்று விளங்குபவன்.

வேதங்கள், ஆகமங்கள், வேதாந்தம் முதலிய சாஸ்திரங்களின் துணைகொண்டே அறியப்படுபவன் (அல்லது, வேதம் ஆகமங்கள், வேதாந்தம் முதலியவற்றின் சொற்களின் உட்பொருளானவன்) வசிகரமாக குழலூதுவதில் வல்லவன். காமச்சுவை ததும்பும் கார்மேனி வண்ணன். ஸங்கீதம், ஸாஹித்யம் இவற்றின் ஒன்று கூடிய பேரானந்தம் நிரம்பப் பெற்ற பெருங்கடலுக்கு ஒப்பானவன்.

சரத்கால நிலவு போன்ற அழகான முகம் படைத்தவன். கருணை தோய்ந்த தாமரைக்கண்ணன். யோகிகளின் மனதுகளாகிற நீர்நிலைகளில் உலவும் அன்னப்பறவை போன்றவன். ஹரிதாஸர்கள் மனங்களை மகிழ்வித்துக்கொண்டு பாம்பணையில் பள்ளிகொண்டுள்ளவன்.

## 14

## [सरसगतिसञ्चारवैभव वर्णनम्]

*मध्यमावती* | *रूपकम्*

पाहि मां श्री - रङ्गनायक
  परमानन्द - दायक [पा]

मोहिताखिलभुवन - कोमळाङ्गमूर्ते
  कामितार्थफलप्रद - कारुण्यजलधे [पा]

वेदशास्त्रान्तर्गत - स्तूयमानवैभव
  भक्तजनकटाक्षकर - अरविन्दलोचन
गीतवाद्यलयसहित - मधुरगानलोल
  नादब्रह्मरसपूर्ण - भावुकानुकूल [पा]

वैनतेयवाह्यमान - विचित्रगतिगंभीर
  तुरगोत्तमनीयमान - कुटिलगतिसुन्दर
उरगराजसमललित - नळिनगतिसुकुमार
  रसिकहरिदासविनुत - सरसगतिसञ्चार [पा]

## 14

## நடையழகு நாயகன்

மத்யமாவதீ | ரூபகம்

*பாஹிமாம் ஸ்ரீரங்கநாயக*
  *பரமானந்ததாயக* (பா)

*மோஹிதாகிலபுவன கோமளாங்கமூர்த்தே*
  *காமிதார்த்தபலப்ரத காருண்யஜலதே* (பா)

*வேதசாஸ்த்ராந்தர்கதஸ்தூயமானவைபவ*
  *பக்தஜனகடாக்ஷகர அரவிந்தலோசன*
*கீதவாத்யலயஸஹித மதுரகானலோல*
  *நாதப்ரும்மரஸபூர்ண பாவுகாநுகூல*

வைனதேயவாஹ்யமான விசித்ரகதிகம்பீர
துரகோத்தமநீயமான குடிலகதிஸுந்தர
உரகராஜஸமலலித நளினகதிஸுகுமார.
ரஸிகஹரிதாஸவிநுத ஸரஸகதிஸஞ்சார (பா)

மேலான பேரின்பமளிக்கும் ஸ்ரீரங்க நாயகா! என்னைக் காத்தருள்வாயாக.

அகில உலகங்களையும் மயக்கத்தில் ஆழ்த்தக்கூடிய அழகிய அங்க அவயவங்கள் படைத்தவனே! வேண்டிய நற்பயன்களை நல்கிடும் கருணைக்கடலே. (என்னைக் காத்தருள்வாயாக)

வேதங்கள், சாஸ்த்திரங்களில் உள்ளடங்கியதான போற்றுதற்குரிய பெருமைகள் வாய்ந்தவனே! தன்னையண்டிவந்த பக்தர்களை கடாக்ஷித்து அருள்பாலிக்கும் கமலக்கண்ணனே! தாளக்கட்டு, வாத்யஇசை இவைகளுடன்கூடிய கீதங்களால் மகிழ்ச்சியடைபவனே! நல்ல மனப்பக்குவத்துடன் நாதத்தை போற்றுவோர்க்கு துணையிருப்பவனே!

கருடன் மீதமர்ந்து ஆச்சரியமாக கம்பீர நடைபோட்டு பவனி வருபவனே! குதிரை மீதேறி கோணவையாளி சிறப்புடன் நடைபோடுபவனே! அரவத்தில் மென்மையான அழகிய வளைந்து செல்லும் நடையுடன் உலா வரும் அழகோனே! பரம ரஸிகர்களான ஹரிதாஸர்களால் கொண்டாடப்படும் வசீகரமான நடையழகுடன் ஸஞ்சாரம் செய்பவனே! (என்னைக் காப்பாற்றுவாயாக)

## 15

## [श्रितजनपरिपालनतत्पर श्रीरङ्गेश महत्वम्]

पन्तुवराळी आदि

श्रितजनपरिपाल हरे रङ्ग
जितमन्मथाकार - हरे रङ्ग [श्रि]

गरुडगमनदेव परमपुरुषभाव
उरगशयनलोल अमरवन्दितशील [श्रि]

सकलभुवनपालक हरे रङ्ग
कामितफलदायक

द्रौपदीदेवी - मानसंरक्षक
श्रीनायिकासमेत - श्रीरङ्गनायक [श्रि]

कमलललितवदन हरे रङ्ग
कोमळमृदुचरण
सारसलोचन - श्यामळगात्र
प्रमुदितहरिदास - आर्तिनिवारय [श्रि]

## 15

## அண்டினோரை அருள்பாலிக்கும் அரங்கன்

பந்துவராளி ஆதி

*ச்ரிதஜனபரிபால ஹரே ரங்க*
*ஜிதமன்மதாகார ஹரே ரங்க (ஸ்)*

*கருடகமனதேவ பரமபுருஷபாவ*
*உரகசயனலோல அமரவந்திதசீல (ஸ்)*

*ஸகலபுவனபாலக ஹரே ரங்க*
*காமிதபலதாயக*
*த்ரௌபதீதேவீ மானஸம்ரக்ஷக*
*ஸ்ரீநாயிகாஸமேத ஸ்ரீரங்கநாயக (ஸ்)*

*கமலலலிதவதன ஹரே ரங்க*
*கோமளம்ருதுசரண*
*ஸாரஸலோசன ச்யாமளகாத்ர*
*ப்ரமுதிதஹரிதாஸ ஆர்த்திநிவாரய (ஸ்)*

*அண்டினோரை அருள்பாலிக்கும் மன்மதனை வென்ற அழகு படைத்த அரங்கா!*

*கருடன் மீதமர்ந்து செல்லும் பரம புருஷன் என்று போற்றப்படும் பெருமையுள்ளவனே! தேவர்களால் வணங்கப்பட்டு பாம்பணையில் பள்ளி கொள்வதில் நாட்டமுடையவனே!*

*எல்லாவுலகங்களையும் காத்தருளி, வேண்டிய நன்மைகளை ாரி வழங்கவல்ல அரங்கா! தக்க சமயத்தில் த்ரௌபதியின் மானத்தைக் காப்பாற்றிய திருமகள் மெச்சும் திருவரங்கா!*

தாமரைபோன்ற அழகிய முகத்தையும் வசீகரமான மென்மையான திருவடிகளையும் கொண்டவனே! கருணைரஸம் ததும்பிடும் கண்கள் படைத்த கார்மேனி வண்ணனே! உன்னால் களிப்பூட்டப்பட்ட ஹரிதாஸர்களின் துயர்களைத் தீர்ப்பாயாக!

## 16

## [श्री वीरराघवमूर्तिपरिग्रह श्रीरङ्गेशः]

*अटाणा* *आदि*

जय विजयीभव देवादिदेव
भवभयवारक - श्रीरङ्गनायक [ज]

नयरणकोविद - चण्डप्रचण्ड
शत्रुसन्तापक - शतमार्ताण्ड [ज]

दण्डकमाश्रित - मुनिगणरक्षण
करधृतकोदण्ड - खरदूषणान्तक
चतुर्दशसाहस्त्र - निशाचरमर्दन -
हर्षितजानक्या - ऽऽलिङ्गितशूर [ज]

अण्डचराचर - सकलजीवात्मक
कण्टकरावण - दर्पविनाशक
दशशिरच्छेदन - शरजालवर्षक
पालितहरिदास - रघुवररूप [ज]

## 16

## வீர ராகவனாயுதித்த அரங்கன்

அடாணா ஆதி

*ஜயவிஜயீபவ தேவாதிதேவ*
*பவபயவாரக ஸ்ரீரங்கநாயக (ஜ)*

*நயரணகோவித சண்டப்ரசண்ட*
*சத்ருஸந்தாபக சதமார்த்தாண்ட (ஜ)*

தண்டகமாச்ரித முனிகணரக்ஷண
　　கரத்ருதகோதண்ட கரதூஷ்ணாந்தக
சதுர்தசஸாஹஸ்ர நிசாசரமர்த்தன
　　ஹர்ஷிதஜானக்யாலிங்கிதசூர　　(ஜ)

அண்டசராசர ஸகலஜீவாத்மக
　　கண்டகராவண தர்ப்பவிநாசக
தசசிர: சேதன சரஜாலவர்ஷக
　　பாலிதஹரிதாஸ ரகுவரரூப　　(ஜ)

தேவர்களுக்கெல்லாம் மேலான தேவனே! ஸம்ஸார பயத்தைப் போக்கடிக்க வல்லவனே! ஸ்ரீரங்கா! உனக்கு வெற்றிமேல் வெற்றி ஏற்படுக!

அறப்போர் தொடுத்து எதிரிகளை ஒடுக்குவதில் பெருஞ்சூறவளி போன்ற பராக்ரமம் பொருந்தியவனே! சத்ருக்களை பொசுக்குவதில் நூறு சூரியர்களுக்கு இணையானவனே!

தண்டகாரண்யத்தை இருப்பிடமாகக்கொண்ட தவச்சீலர்களைக் காப்பாற்றுவதற்காக கையில் தாங்கிய கோதண்டம் என்னும் வில்லுடன் கரன், தூஷணன் முதலியவர்களின் உயிர்களுக்கு முடிவு கட்டியவனே. பதினாலாயிரம் அரக்கர்களைக் கணப்பொழுதில் மாய்த்ததால் மகிழ்ச்சியடைந்த ஜனகரின் புதல்வியான சீதையால் மார்புறத் தழுவப்பட்டவனே!

அசையும் பொருள்கள், அசையாப் பொருள்களடங்கிய உலகிலுள்ள எல்லா உயிரினங்களுக்கும் முள்ளெனத் துன்புறுத்திக் கொண்டிருந்த ராவணனின் கர்வத்தை அடக்கியவனே. அம்பு மழைகளைப் பொழிந்து அவனுடைய பத்து தலைகளையும் அறுத்தெறிந்து ஹரிதாஸர்களைக் காத்தருளிய ஸ்ரீராமசந்திர மூர்த்தியாக உருவெடுத்தவனே! (உனக்கு வெற்றிமேல் வெற்றி ஏற்படுக)

**17**

## [गजेन्द्रमोक्षदायक श्रीरङ्गपतिवैभवम्]

*रीतिगौळै*　　*रूपकम्*

**परिपालय मां श्री-**
　　**परिमळरङ्गपते सुरपते**　　**[प]**

करिराजसन्ताप - दुरितार्तिभञ्जन
व्रजसुन्दरीगण - मानसरञ्जन [प]

कनकमयदिव्य - विमानसदन
फणिराजकल्पित - पर्यङ्कशयन
इनकुलभूषण - धीराग्रगण्य
जनकसुतारमण - वन्दितवरेण्य [प]

ललितमोहनापाङ्ग - कोमळवदन
पल्लवमृदुतर - मङ्गळचरण
कलितकौस्तुभहार - कस्तूरीतिलक
पालितहरिदास - भवदुःखवारक [प]

## 17

## கரிராஜன்காத்திட்ட கஸ்தூரீரங்கன்

ரீதிகௌளை ரூபகம்

*பரிபாலயமாம் ஸ்ரீபரிமளரங்கபதே*
*ஸுரபதே* (ப)

*கரிராஜஸந்தாப துரிதார்த்திபஞ்ஜன*
*வ்ரஜஸுந்தரீகண மானஸரஞ்ஜன* (ப)

*கனகமய திவ்ய விமானஸதன*
*பணிராஜகல்பித பர்யங்கசயன*
*இனகுலபூஷண தீராக்ரகண்ய*
*ஜனகஸுதாரமண வந்திதவரேண்ய* (ப)

*லலிதமோஹனாபாங்க கோமளவதன*
*பல்லவம்ருதுதர மங்களசரண*
*கலிதகௌஸ்த்துபஹார கஸ்தூரீதிலக*
*பாலிதஹரிதாஸ பவதுக்கவாரக* (ப)

*தேவர்களுக்கெல்லாம் தலைவனான பரிமளரங்கா. என்னைக் காத்தருள்வாயாக.*

*கஜராஜனுக்கு ஏற்பட்ட துயரத்தையும், பயத்தையும் போக்கடித்தவனே! ஆயப் பெண்டிர்களின் மனதிற்கு பெரும்களிப் பூட்டியவனே!*

*தங்கமயமான மேலான விமானத்தில் உறைபவனே. ஆதிசேஷனால் அமைக்கப்பட்ட கட்டிலின்மீது உறக்கங்கொள்பவனே. சூரிய வம்சத்தின் அணிகலமாயுதித்து ஜனகரின் புதல்வியான சீதையை மகிழ்வித்தவனே. வீரர்களுக்கெல்லாம் முதல்வனாக விளங்குபவனே! எல்லோராலும் வணங்கப்படும் உத்தமனே.*

*அனாயாசமான கண்பார்வையாலேயே எல்லோரையும் மயக்கிடும் அழகிய முகமண்டலத்தையுடையவனே! மலர்களைக் காட்டிலும் மென்மையான திருப்பாதங்கள் படைத்தவனே. கௌஸ்துபம் என்ற மாலையணிந்து கஸ்தூரிப் பொட்டுடன் அழகாய் விளங்குபவனே. உன்னால் காப்பாற்றப்பட்ட ஹரிதாஸர்களின் வாழ்க்கையில் ஏற்படும் துயர்களைப் போக்கடிப்பவனே! (என்னைக் காத்தருள்வாயாக)*

## 18

## [अखिल भूमण्डलालङ्कृताकार श्रीरङ्गेशः]

*बृन्दावनसारङ्ग* — *मिश्रम्*

पूज्यं रङ्गराजं
पुण्यनामं भजेऽहम् [पू]

पूज्यगुणालय - गजराजरक्षकं
राजितपीताम्बर - वैजयन्तीभूषितम् [पू]

चन्द्रबिम्बसमान - सुन्दरवदनं
इन्दीवरश्याम - मोहितमुनिगणम्
पङ्कजदळनयन - पन्नगतनुशयनं
नन्दितनिजजन - तापनिवारणम् [पू]

दशरथवरकुमार - सेव्यप्रतापं
दशमुखसोदर स्थापितवैभवम्
अखिलभूमण्डल - अलङ्कृतवेषं
पालितहरिदास - भाग्यवितरणम्

## 18

# அகில உலக நாயகன் அரங்கன்

ப்ருந்தா... ஸாரங்கா மிச்ரசாபு

*பூஜ்யம் ரங்கராஜம் புண்யநாமம்*
*பஜேஹம்* (பூ)

*பூஜ்யகு...ாலய கஜராஜரக்ஷகம்*
*ராஜிதபீதாம்பர வைஜயந்திபூஷிதம்* (பூ)

*சந்த்ரபிம்பஸமான ஸுந்தரவதனம்*
*இந்திவரச்யாம மோஹிதமுனிகணம்*
*பங்கஜதளநயன பன்னகதநுசயனம்*
*நந்திதநிஜஜன தாபநிவாரணம்* (பூ)

*தசரதவரகுமார ஸேவ்யப்ரதாபம்*
*தசமுகஸோதர ஸ்தாபிதவைபவம்*
*அகில பூமண்டல அலங்க்ருதவேஷம்*
*பாலிதஹரிதாஸ பாக்யவிதரணம்* (பூ)

*யாவராலும் போற்றப்படும் ரங்கராஜனே! உன்னுடைய புண்யமான பெயர்களை நான் உச்சரிக்கிறேன்.*

*மிகச்சிறந்த குணங்கள் நிறம்பப் பெற்ற கஜேந்திரனைக் காத்தருளியவனே! மின்னும் பீதாம்பரம் என்னும் உயர்ந்த ஆடையையும் வைஜயந்தீ என்ற மாலையும் அணிந்து கொண்டு அழகுடன் விளங்குபவனே.*

*சந்திரன் போன்ற வசீகரமான திருமுகமண்டத்துடனும், இந்திர நீல மணிபோன்ற கரு நிற மேனியுடனும் தவச்சீலர்களின் மனதுகளைக் கொள்ளை கொண்டவனே! தாமரை இதழ் போன்ற கண்களுடன் ...பாமபணைமீது பள்ளிகொண்டு அண்டியவர்களுக்கு பேரானந்தத்தைப் பொழிந்து கொண்டு அவர்களுக்கு ஆறுதல் அளிப்பவனே.*

*தசரதருடைய தவப் புதல்வனான (ஸ்ரீ ராகவனால்) வணங்கப்பட்டவனே! பத்துத்தலைகள் கொண்ட ராவணனின் உடன் பிறந்த விபீஷணனால் நிலை நாட்டப்பட்ட பெருமை வாய்ந்தவனே! இந்த பூவுலகம் கொண்டுள்ள முழுஅழகினையும் திருஉருவத்தில் பெற்றுள்ளவனே. உன்னால்*

காப்பாற்றப்பட்ட ஹரிதாஸர்களுக்கு எல்லா வித நன்மைகளையும் நல்குபவனே! (உன்னுடைய புண்ணியமான பெயர்களை உச்சரிக்கிறேன்)

19

## [सरससल्लापचतुरश्रृङ्गाररङ्ग वैभवम्]

*वसन्ता* *मिश्रम्*

सरससल्लापचतुर - श्रृङ्गारनायक
कावेरीतटविहार - कस्तूरीरङ्ग [स]

नारदादिमुनिगेय - नरकादिसंहरण
वारणार्तिनिवारण - उरगेन्द्रशयन [स]

अणिमादिगुणोपेत - परमादिदेव
मणिगणविभूषिताङ्ग - मनोहरदेह
कुण्डलालङ्कृताकार - कोटिमनोजरूप
गोमण्डल परिवेष्टित - गोपाङ्गनाजार [स]

दुष्टजनसंहारक - शिष्टपरिपालक
इष्टजनमनोरथा - (अ)भीष्टफलदायक
अष्टमहिषीसमेत - कृष्णरूपजनार्दन
अष्टाक्षरोच्छारक - हरिदासार्चितोत्तम [स]

19

## மங்கையர்மயக்கும் சிங்காரரங்கன்

வஸந்தா மிச்ரசாபு

*ஸரஸஸல்லாபசதுர ச்ருங்கார நாயக*
*காவேரீ தடவிஹார கஸ்தூரீரங்க* (ஸ)

*நாரதாதிமுனிகேய நரகாதிஸம்ஹரண*
*வாரணார்த்திநிவாரண உரகேந்த்ரசயன* (ஸ)

*அணிமாதிகுணோபேத பரமாதிதேவ*
*மணிகணவிபூஷிதாங்க மனோஹரதேஹ*

குண்டலாலங்க்ருதாகார கோடிமனோஜரூப
கோமண்டலபரிவேஷ்டித கோபாங்கனாஜார (ஸ)

துஷ்டஜனஸம்ஹாரக சிஷ்டபரிபாலக
இஷ்டஜனமனோரத அபீஷ்டபலதாய:க
அஷ்டமஹிஷீஸமேத க்ருஷ்ணரூபஜனார்தன
அஷ்டாக்ஷரோச்சாரக ஹரிதாஸார்ச்சிதோத்தம (ஸ)

காமச்சுவை நிரம்பிய களியாட்டங்கள் புரிவதில் தேற்ச்சி பெற்ற நாயகனே! காவேரியின் கரைகளில் திருவிளையாடல்கள் புரியும் கஸ்தூரி ரங்கா!

நாரதர் போன்ற முனிவர்களால் துதிக்கப்பட்டு நரக பயத்தை ஒழிக்க வல்லவனே. கஜேந்திரனுக்கு ஏற்பட்ட பேராபத்தை போக்கடித்து பாம்பணையில் பள்ளி கொள்ளும் பரமனே.

அணிமா முதலிய அஷ்ட மகாசித்திகளுடன் கூடிய பெருமை வாய்ந்தவனே! உயர்ந்த இரத்தினங்களாலான அணிகலங்களால் அழகுபடுத்தப்பட்ட சிறந்த அவயவ சௌந்தர்யத்துடன் கூடியவனே! வசீகரமான திருமேனி படைத்தவனே! குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்டு கோடி மன்மதர்களுக்கு ஒப்பான காந்திபடைத்தவனே! பசுக்கூட்டங்களால் சூழப்பட்டு ஆயச்சிறுமியர்கள் உள்ளம் கவர்ந்தவனே.

தீயோர்களை அழித்து சாதுக்களைக் காத்தருள்பவனே. தன்னிடம் அன்பு பூண்டுள்ளவர்கள் மனதால் வேண்டிய நற்பயன்கள் யாவையும் பூர்த்தி செய்பவனே. எட்டு பட்டத்துராணிகளுடன் சூழப்பட்ட கண்ணனாய் உருவமெடுத்த ஜனார்த்தனா. எட்டெழுத்து மந்திரத்தை எப்பொழுதும் உச்சரித்துக் கொண்டிருக்கும் ஹரிதாஸர்களால் துதிக்கப்படுவனே.

## 20

## [अन्तरङ्गचारी सुन्दराङ्गरङ्गेशः]

*सरस्वतीमनोहरी या नळिनकान्ति* — *आदि*

**सुन्दराङ्ग श्री - रङ्गनायक**
**अन्तरङ्गचारिन् - जगन्मोहन** [सु]

**नन्दनन्दन भक्तचन्दन**
**वेदसन्नुत - पादपङ्कज** [सु]

सत्यधर्ममार्ग - संप्रदर्शक
पतिभक्तसीता - प्राणनायक
दानवान्तक दीनरक्षक
रामचन्द्र राज - कुलदीपक [सु]

नवनीतचोर - चटुलेक्षण
वेणुगानलोल - विश्वपावन
पन्नगासन पापनाशक
पक्षिवाहन हरिदासं पालय [सु]

## 20

## அரம் வளர்த்த அரங்கன்

நளினகாந்தி அல்லது சரஸ்வதிமனோஹரி — ஆதி

*ஸுந்தராங்கஶ்ரீ ரங்கநாயக*
*அந்தரங்கசாரின் ஜகன்மோஹன (ஸு)*

*நந்தநந்தன பக்தசந்தன*
*வேதஸந்நுத பாதபங்கஜ (ஸு)*

*ஸத்யதர்மமார்க ஸம்ப்ரதர்சக*
*பதிபக்தஸீதா ப்ராணநாயக*
*தானவாந்தக தீநரக்ஷக*
*ராமசந்த்ரராஜகுலதீபக (ஸு)*

*நவநீதசோர சடுலேக்ஷண*
*வேணுகானலோல விச்வபாவன*
*பன்னகாஸன பாபநாசக*
*பக்ஷிவாஹன ஹரிதாஸபாலயம் (ஸு)*

*அழகான அவயவ சௌந்தர்யத்துடன் விளங்கும் ரங்க நாயகா! உலகத்தையே மயக்கத்திலாழ்த்தி எல்லோருடைய உள்ளங்களிலும் நடமாடுபவனே!*

*மேலான ஆனந்தத்தையளிப்பவனே! பக்தர்களுக்கு குளிர்ச்சியை[illegible]நம் சந்தனம் போலுள்ளவனே! வேதங்களால் துதிக்கப்படும் திருவடிகள் கொண்டவனே!*

ஸத்யம், தர்மம் முதலியவற்றின் அடிப்படை வழியை உலகிற்கு நன்கு எடுத்துக்காட்டியவனும், உத்தம பதிவிரதையான ஸீதையின் உயிருக்கு உயிரானவனும் அரக்கர்களை அழித்து எளியவர்களைக் காப்பாற்றியவனுமான ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியின் அரசகுலவிளக்கே!

வெண்ணையைக் கவர்வதில் ஆர்வத்துடன் கூடியவனும், தனது குழலோசையின் இனிமையால் உலகத்தையே தூய்மையடையச் செய்பவனும், பாம்பை தனது இருக்கையாகவும், பறவையாகிற கருடனை வாகனமாகவும் கொண்டுள்ளவனே! ஹரிதாஸர்களின் பாபங்களை யெல்லாம் போக்கி அவர்களைக் காப்பாற்றுவாயாக

## 21

## [अन्तरङ्गपीठ नित्यनिवासक श्रीरङ्गनायकः]

*सरसाङ्गी* *आदि*

श्रीरङ्गनायकं चिन्तयाम्यहं
सन्ततं श्रितजनपारिजातम् [श्री]

अन्तरङ्गपीठ - नित्यनिवासकं
अन्तकग्रहाभय - निवारकदेवम् [श्री]

उत्तुङ्गगिरिवर - जलधरसञ्जात
तरङ्गसन्तरळित - कावेरीसेवितम्
वाचामगोचर - वेदान्तसारज्ञ -
निगमान्तदेशिक - रचनाभिनन्दितम् [श्री]

सुरारिलङ्केश - रावणमर्दक -
नरवरविजय - राघवपूजितम्
सद्गुरुपरिपूर्ण - करुणाकटाक्षेण -
तारितहरिदास - मानसरञ्जकम् [श्री]

## 21

## நாவலர் வணங்கிடும் ஞானச்சுடர்

ஸரஸாங்கி ஆதி

*ஸ்ரீரங்கநாயகம் சிந்தயாம்யஹம்*
*ஸந்ததம் ச்ரிதஜனபாரிஜாதம் (ஸ்ரீ)*

*அந்தரங்கபீட நித்யநிவாஸகம்*
*அந்தகமஹாபய நிவாரகதேவம் (ஸ்ரீ)*

*உத்துங்ககிரிவர ஜலதரஸஞ்ஜாத*
*தரங்கஸந்தரளித காவேரீஸேவிதம்*
*வாசாமகோசர வேதாந்தஸாரஜ்ஞ*
*நிகமாந்ததேசிக ரசனாபிநந்திதம் (ஸ்ரீ)*

*ஸுராரிலங்கேச ராவணமர்தக*
*நரவர்விஜயராகவ பூஜிதம்*
*ஸத்குருபரிபூர்ண கருணாகடாக்ஷண*
*தாரிதஹரிதாஸ மானஸரஞ்ஜகம் (ஸ்ரீ)*

*அண்டியவர்களுக்கு அவரவர்கள் விரும்பும் பலன்களை அளித்திடும் பாரிஜாத மரம் போன்று விளங்கும் ரங்கநாதனை எப்பொழுதும் நான் சிந்தனை செய்கிறேன்.*

*உள்ளமாகிய இருக்கையில் எப்பொழுதும் வீற்றிருந்து எமபயத்தை போக்கடிக்கவல்ல தேவனை சிந்தனை செய்கிறேன்.*

*உயர்ந்த மலை பிரதேசங்களில் சூழ்ந்து காணப்படும் மேகக் கூட்டங்களில் தோன்றி, அலைகளுடன் பெருக்கெடுத்து வரும் காவிரியால் வணங்கப்படுகிறான் அவன். அதே போன்று வாக்குகளுக்கு அப்பாற்பட்ட மறைகளின் சுவையறிந்த ஸ்ரீ மான் நிகமாந்த தேசிகரின் உயர்ந்த படைப்புகளை மனக்களிப்புடன் அனுபவிக்கிறான்.*

*அவன் தேவர்களுக்கு பகையோனான இலங்கையின் வேந்தனான ராவணனை அழித்த பெருமை வாய்ந்த மாந்தருள் உத்தமனான விஜயராகவனால் பூஜிக்கப்பட்டவன். ஸத்குருவினுடைய பூர்ண கடாக்ஷ மகிமையால் கைதூக்கிவிடப்பட்ட ஹரிதாஸர்களின் மனதிற்கு*

*மகிழ்ச்சியளித்துக் கொண்டிருப்பவன். (இப்படிப்பட்ட ரங்கநாதனை நான் சிந்தனை செய்கிறேன்.)*

22

## [परब्रह्मतत्वप्रकाशक श्रीरङ्गेशः]

*जनरञ्जिनी* *आदि*

श्रीरङ्गनाथं श्रितपारिजातं
सर्वदेवदेवं शरणं व्रजामि [श्री]

श्रुतिधर्मशास्त्र - प्रतिपाद्यमानं
वीतरागयोगि - हृदयविहारम् [श्री]

मनुजेन्द्रपुत्र - कृतस्तुतिपात्रं
मन्मथाकारं मोहनाङ्गमूर्तिम्
भुजङ्गशयानं भुवनैकरत्नं
ब्रह्मदेववन्द्यं प्रणवस्वरूपम् [श्री]

परवासुदेव - परिशोभमान -
चारूहेमवर्ण - विमानान्तर्गतम्
वररत्नपीठ - भ्राजमानश्रेष्टं
हरिदासनुत - परब्रह्मतत्वम् [श्री]

22

## பரம்பொருளான அரங்கன்

ஜனரஞ்ஜினி ஆதி

*ஸ்ரீரங்கநாதம் ச்ரிதபாரிஜாதம்*
*ஸர்வதேவதேவம் சரணம்வ்ரஜாமி* (ஸ்ரீ)

*ச்ருதிதர்மசாஸ்த்ர ப்ரதிபாத்யமானம்*
*வீதராகயோகி ஹ்ருதயவிஹாரம்* (ஸ்ரீ)

*மநுஜேந்த்ரபுத்ர க்ருதஸ்துதிபாத்ரம்*
*மன்மதாகாரம் மோஹனாங்கமூர்த்திம்*

புஜங்கேசயானம் புவனைகரத்னம்
ப்ரம்ஹதேவவந்த்யம் ப்ரணவஸ்வரூபம் (ஸ்ரீ)

பரவாஸுதேவ பரிசோபமான
சாருஹேமவர்ண விமானாந்தர்கதம்
வரரத்னபீட ப்ராஜமானச்ரேஷ்டம்
ஹரிதாஸநுத பரப்ரஹ்மதத்வம் (ஸ்ரீ)

தன்னையண்டியவர்கள் விரும்பி வேண்டிடும் எல்லா நன்மைகளையும் அளிக்கவல்ல பாரிஜாத மரம் போன்றவனும், அமரர்களுக்கெல்லாம் மேலானவனுமான ஸ்ரீரங்கநாதனிடம் நான் தஞ்சமடைகிறேன்.

மறைகள், அறநூல்களின் துணையால் அடையப்படவேண்டிய அவன் விருப்பு வெறுப்புகளற்ற யோகிகளின் இதயங்களைக் களிக்கச்செய்கிறான்.

மனிதகுலத்தின் மாமன்னனின் மைந்தன் (ஸ்ரீராமபிரானின்) துதிகளுக்கு ஏற்றவனான அவன் மன்மதனை மிஞ்சிய அழகுடன் பிறரை மயக்கத்தில் ஆழ்த்தகூடிய வசீகரமான தோற்றத்துடன் விளங்குகிறான். இந்த பூவுலகத்திலேயே மிகச்சிறந்த இரத்னம் போன்று விளங்கும், அவன் ப்ரும்மதேவனால் ஆராதிக்கப்பட்டு ப்ரணவத்தின் வடிவம் கொண்ட (ஓம் என்னும் அக்ஷர வடிவில்) பாம்பணையில் பள்ளிகொண்டுள்ளான்.

பரவாசுதேவரால் அழகு படுத்தப்பட்ட தங்கமயமான விமானத்துள் ஒளிவீசும் இரத்தினங்கள் பதிக்கப்பட்ட இருக்கையில் பிரகாசத்துடன் விளங்கும் மேலானவனாகவும், ஹரிதாஸர்களால் வணங்கப்படும் பரப்ரும்மதத்துவமாகவும் விளங்குபவன் அவனேயாவான்.

## 23

## [कलिमलवारक कस्तूरीरङ्गपतिः]

सिन्धुभैरवी — आदि

जय विजयीभव रङ्गमुरारे
सज्जनपालन - सद्गुणशौरे [ज]

मन्दरगिरिधर - मधुकैटभारे
मृदुतरपदयुग - मुनिवन्द्यहरे [ज]

श्रुतिस्मृतिबोधित - ब्रह्मस्वरूप
गीतरसामृत - वर्षकदेव
कलिमलवारक - पुण्यचरित्र
विकसितहरिदास - हृदयविहार [ज]

## 23

## மறை பறையும் இறைவன்

ஸிந்துபைரவி ஆதி

*ஜயவிஜயீபவ ரங்கமுராரே*
*ஸஜ்ஜனபாலன ஸத்குணசௌரே (ஜ)*

*மந்தரகிரிதர மதுகைடபாரே*
*ம்ருதுதரபதயுக முனிவந்த்ய ஹரே (ஜ)*

*ச்ருதிஸ்ம்ருதிபோதித ப்ரம்ஹஸ்வரூப*
*கீதரஸாம்ருத வர்ஷகதேவ*
*கலிமலவாரக புண்யசரித்ர*
*விகஸிதஹரிதாஸ ஹ்ருதயவிஹார (ஜ)*

*ஏ அரங்கா! முரன் என்னும் அசுரனை அழித்தவனே. நல்லோரைக் காத்தருளும் பெருமைவாய்ந்த குணப்பான்மையுடன் சிறந்து விளங்குபவனே. உனக்கு வெற்றிமேல் வெற்றி ஏற்படுக.*

*மந்தரம் என்ற மலையைத் தாங்கியவனே. மது, கைடபன் என்ற அசுரர்களை ஒழித்துக் கட்டியவனே. தவச்சீலர்களான முனிவர்களால் வணங்கப்படும் மென்மையான திருவடிகளைக் கொண்டுள்ளவனே.*

*மறைகள், அவற்றின் துணை நூல்கள் மூலம் நன்கு தெளிவாக்கப்பட்ட பரம்பொருளாக அறியப்படுபவனே. இசையமுதத்தை பொழிந்து கொண்டு இருப்பவனே. கலிகாலத்தின் போக்கில் ஏற்படும் தீயசக்திகளை தடுக்கவல்ல புனிதமான நடத்தையுடன் கூடியவனே. நன்கு மலர்ச்சியடைந்த ஹரிதாஸர்களின் இதயங்களில் விளையாடல்கள் புரிந்து களிப்படையவனே. (உனக்கு வெற்றிமேல் வெற்றி ஏற்படுக)*

## 24

## [वेदान्तवेद्य परमात्मस्वरूप श्रीरङ्गेशः]

*हिन्दोळम्* *आदि*

निरुपम - सुन्दराङ्ग - श्री
नित्य - परिमळरङ्ग [नि]

धरणीशवन्दित - परमकृपानिधे
दलितसुरासुर - पालकशौरे [नि]

अजगजरक्षक - अमितप्रताप
निजभक्तकामित - मङ्गळदायक
कुञ्जगृहान्तर - मञ्जुविहार
व्रजसुन्दरीगण - मानससञ्चार [नि]

कारणकार्यादि - बन्धनविदूर
कल्पितमाया - मोहविरहित
वेदवेदान्त - तत्वप्रकाश
प्रमुदितहरिदास - मानसहंस [नि]

## 24

## மறையுணர்த்தும் பரமன்

ஹிந்தோளம் ஆதி

*நிருபமஸுந்தராங்க - ஸ்ரீ*
*நித்யபரிமளரங்க* *(நி)*

*தரணீசவந்தித பரமக்ருபாநிதே*
*தலிதஸுராஸுர பாலகசௌரே* *(நி)*

*அஜகஜரக்ஷக அமிதப்ரதாப*
*நிஜபக்தகாமித-மங்கள தாயக*
*குஞ்ஜக்ருஹாந்தர மஞ்ஜுவிஹார*
*வ்ரஜஸுந்தரீகண மானஸஸஞ்சார* *(நி)*

காரணகார்யாதி பந்தனவிதூர
கல்பிதமாயா மோஹவிரஹித
வேதவேதாந்த தத்வப்ரகாச
ப்ரமுதிதஹரிதாஸ மானஸஹம்ஸ (நி)

உவமையற்ற அவயவ அழகு படைத்தவனே! நிலையான நறுமணத்துடன் கூடிய அரங்கா!

மாமன்னர்களால் வணங்கப்படும் கருணையே வடிவமானவனே. நலிவடைந்த தேவர்கள், அசுரர்கள் எல்லோரையும் காத்தருளியவனே.

ப்ரும்மா, கரிராஜன் முதலியவர்களைக் காப்பாற்றிய எல்லையில்லாத பெருமை படைத்தவனே. தன்னை உண்மையான அன்புடன் வழிபடும் பக்தர்களின் நல்ல விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனே. புதர்கொடி இல்லங்களுக்கிடையில் ஆயச்சிறுமியர்களுடன் திருவிளையாடல்கள் புரிந்து அவர்கள் மனதில் எப்பொழுதும் நடமாடிக்கொண்டிருப்பவனே.

காரணம், அதன் விளைவு என்ற தொடர் கட்டுப்பாடுகளுக்கு அப்பாற்பட்டவனே! மாயையின் சக்தியால் மதிமயக்கமற்றவனே! மறைகள் அவற்றின் முடிவான உட்கருத்துக்களுக்கு ஒளியாய் விளங்குபவனே! மகிழ்ச்சி நிரம்பிய ஹரிதாஸர்களின் மனதுகளாகிய நீர்நிலைகளில் உலாவும் அன்னப்பறவை போன்றவனே.

## 25

## [परमान्ददायक श्रीरङ्गपति वर्णनम्]

सहाना मिश्रम्

अक्षीणकरुणानिधे पर-
मानन्दसुखवारिधे हरे रङ्ग [अ]

शेषपर्यङ्कभोग - योगवैभवमूर्ते
अशेषजनरञ्जन - अगणितगुणकीर्ते [अ]

शङ्खचक्रधर - श्यामळगात्र
पङ्केरुहासन - अम्भोजनेत्र
अमरगणैस्स्तुत्य - अमितपराक्रम
मकरकुण्डलधर - मनोभिराम [अ]

सरसिजनयन शरदिन्दुवदन
मनसिजशतकोटि - लावण्यपूर्ण
गोपवधूजन - तापनिवारण
हरिदासरञ्जन - भोगीशशयन [अ]

25

## பேரின்பப் பெருங்கடலான அரங்கன்

ஸஹானா மிச்ரசாபு

*அக்ஷீணகருணாநிதே பரமானந்தஸுகவாரிதே (அ)*
*ஹரேரங்கா*
*சேஷபர்யங்கபோக யோகவைபவமூர்த்தே*
*அசேஷஜனரஞ்ஜன அகணிதகுணகீர்த்தே (அ)*

*சங்கசக்ர தர ச்யாமளகாத்ர*
*பங்கேருஹாஸன அம்போஜநேத்ர*
*அமரகணைஸ்ஸ்துத்ய அமிதபராக்ரம*
*மகரகுண்டலதர மனோபிராம (அ)*

*ஸரஸிஜநயன சரதிந்துவதன*
*மனஸிஜசதகோடி லாவண்ய பூர்ண*
*கோபவதூஜன தாபநிவாரண*
*ஹரிதாஸரஞ்ஜன போகீசசயன (அ)*

*வற்றாத கருணையைப் பெரும் பொக்கிஷமாகக் கொண்டு எல்லையில்லா மேலான பேரின்பப் பெருங்கடலாக விளங்கும் அரங்கா*

*ஆதிசேஷனாகிய கட்டிலில் பள்ளிகொண்டு, யோக மூர்த்தியாகவும் போகமூர்த்தியாகவும் காட்சியளிப்பவனே! விதி விலக்கில்லாமல் எல்லா மாந்தர்களையும் மகிழ்ச்சியிலாழ்த்தி, கணக்கிலடங்காத நற்குணப் பாங்குகளுடன் புகழ்பெற்றவனே!*

*கைகளில் ஏந்திய சங்கம், சக்ராயுதத்துடனும், நீலத்திருமேனியுடனும் விளங்குபவனே. நன்கு மலர்ந்த தாமரை மீதமர்ந்து, சிறிதே மலர்ந்த தாமரைக்கொப்பான கண்பார்வையழகுடன் கூடியவனே. தேவக்கூட்டங்களால் போற்றப்பட்ட மேலான பராக்ரமத்துடன் கூடியவனே. மகர குண்டலங்களால் அழகு படுத்தப்பட்ட திருமுகக்காந்தியுடன் மனதிற்கு மகிழ்ச்சியூட்டுபவனே.*

நீர்நிரம்பிய ஓடைகளில் மலரும் தாமரைப் பூக்களுக்கிணையான (கருணை ததும்பும்) கண்களும், சரத்கால சந்திரன் போன்ற முகமண்டலத்தையும் கொண்டுள்ளவனே. கோடிமன்மதர்களுக் கொப்பான அழகு நிரம்பப் பெற்றவனே. ஆயப் பெண்டிர்களின் தாபங்களைப்போக்கி ஹரிதாஸர்கள் மனதை நெகிழவைக்கும் தோற்றத்துடன் பாம்பணையில் பள்ளிகொண்டவனே.

## 26

## [भक्तियाचना]

*भैरवी* *आदि*

कस्तूरी रङ्गपते कारुण्यजलनिधे
अस्तु मनो मम तव पादारविन्दे [क]

शास्त्रश्रुतिगीत - नादमयगात्र
पादपङ्कजयुग - अरविन्दनेत्र [क]

मकरकुण्डलकेयूरादिविभूष
शक्रादिवन्दित - सुरगणभूष
शठारिमुनिमुख - तोषितवेष
परिहृताखिललोक - परिजनदोष [क]

पङ्केरुहासन - खगपतिवाहन
इन्दिरानन्दकर- फणिपतिशयन
श्रृङ्गारनायक - शरदिन्दुवदन
ओंकारमयदिव्य - विमानसदन [क]

[मध्यमकालः]

मणिमयविरचित - दिव्याभरण
सन्मणिविलसित - नूपुरचरण
मनसिजकोटि अतिसुन्दरवदन
चरणसङ्गत - हरिदाससुरमण [क]

ஸ்ரீ

26

## கஸ்தூரிரங்கனிடம் கருணை வேண்டுதல்

பைரவி ஆதி

கஸ்தூரீரங்கபதே காருண்யஜலநிதே
அஸ்துமனோ மம தவ பாதாரவிந்தே (க)

சாஸ்த்ரச்ருதிகீத நாதமயகாத்ர
பாதபங்கஜயுக அரவிந்தநேத்ர (க)

மகரகுண்டலகேயூராதிவிபூஷ
சக்ராதிவந்தித ஸுரகணபூஷ
சடாரிமுனிமுக தோஷிதவேஷ
பரிஹ்ருதாகிலலோக பரிஜனதோஷ (க)

பங்கேருஹாஸன ககபதிவாஹன
இந்திராநந்தகர பணிபதிசயன
ச்ருங்காரநாயக சரதிந்துவதன
ஓம்காரமய திவ்ய விமானஸதன (க)

மத்யமகாலம்

மணிமயவிரசித திவ்யாபரண
ஸன்மணிவிலஸித நூபுரசரண
மனஸிஜகோடி அதிஸுந்தரவதன
சரணஸங்கத ஹரிதாஸஸுரமண (க)

கஸ்தூரீ ரங்கா! கருணைக்கடலே! என் மனம் உன்னுடைய திருவடிகளிலேயே நிலைத்திருக்கட்டும்.

சாஸ்திரங்கள், வேதங்களால் புகழப்பட்ட நாதமயமான சரீரத்தையுடையவனே, தாமரைபோன்ற பாதங்களையும் கண்களையும் கொண்டவனே.

மகரம், குண்டலங்கள், கேயூரம் முதலிய அணிகலங்கள் அணிந்து அழகுடன் விளங்குபவனே. இந்திரன் முதலிய தேவர்களால் வணங்கப்பட்ட மேன்மைபொருந்தியவனே . நம்மாழ்வார் முகத்திலிருந்து வெளிவந்த பாசுரங்களால் மகிழ்ச்சியடைவிக்கப்பட்டவனே. அகில உலகங்களிலும்

தன்னை அண்டினவர்களின் குற்றம் குறைகளை களைந்தெறிந்து அவர்களை பாலிப்பவனே.

தாமரை மீது அமர்ந்து (பத்மாஸனத்தில் அமர்ந்து) கருடனை வாகனமாகக் கொண்டுள்ளவனே. திருமகளுக்கு மகிழ்ச்சியூட்டும் வகையில் பாம்பணையில் பள்ளிகொண்டிருப்பவனே. காமச்சுவை நிரம்பப்பெற்ற நாயகனாக சரத்கால சந்திரன் போன்ற திருமுகத்துடன் விளங்குபவனே. "ஓம்" என்னும் ப்ரணவ அக்ஷரத்தின் வடிவத்தில் அமைந்த விமானத்தில் உறைபவனே.

இரத்தினங்கள் இழைத்த ஆபரணங்கள் அணிந்துகொண்டிருப்பவனே. குற்றங்களற்ற (தோஷங்கள் இல்லாத) மேலான கற்களுடன் பிரகாசிக்கும் சிலம்புகளை பாதங்களில் அணிந்துள்ளவனே. கோடி மன்மதர்களின் எழிலுடன் கூடிய உடலழகு படைத்தவனே. தன் பாதகமலங்களில் சரணடைந்த ஹரிதாஸர்களை மகிழ்விப்பவனே. (என் மனது உன்னுடைய திருவடிகளிலேயே நிலைத்திருக்கட்டும்)

## 27

## [आत्मबोधम्]

श्यामा — आदि

विहर मानस रङ्गे सदा
निजहृदयारविन्दे [वि]

महनीयलावण्य - गजहरिगमने
कुसुमसुकुमार - कुवलयनयने [वि]

मरकतमणिमय - भूषणे
हे मानस मञ्जुळमृदुभाषणे
मन्मथकोटि - मनोहरभासिते
मारजनक श्री - कुञ्जरपालके [वि]

यादवयुवती - मोहने
हे मानस माधव मधुसूदने
वेदशास्त्रादि - सर्वागममूले
मानितहरिदास - गानविलोले [वि]

# 27

## அகத்திற்கோர் அறிவுரை

சாமா ஆதி

விஹர மானஸ ரங்கே ஸதா
நிஜஹ்ருதயாரவிந்தே (வி)

மஹனீயலாவண்ய கஜஹரிகமனே
குஸுமஸுகுமார குவலயநயனே (வி)

மரகதமணிமய பூஷணே
ஹே மானஸ மஞ்ஜுள ம்ருதுபாஷனே
மன்மதகோடி மனோஹரபாஸிதே
மாரஜனகஸ்ரீகுஞ்சரபாலகே (வி)

யாதவயுவதீ மோஹனே
ஹே மானஸ மாதவ மதுஸூதனே
வேதசாஸ்த்ராதி ஸர்வாகமமூலே
மானிதஹரிதாஸ கானவிலோலே (வி)

ஏ மனமே! இதய கமலத்தில் வீற்றிருக்கும் அரங்கனிடத்தில் இடைவிடாது மகிழ்ந்து களிப்படைவாயாக.

மிகவும் மேலான யானை, சிங்கம் முதலியவற்றின் எழில் மிக்க கம்பீரமான நடையழகு படைத்தவனும், மலர்களிலும் மென்மையான சரீரமும் ஆம்பலின் காந்தியுடன் கூடிய கண்களைக் கொண்டவனுமான அரங்கனிடத்தில் இடைவிடாது மகிழ்ந்து களிப்படைவாயாக.

அவன் மரகதங்களிழைத்த ஆபரணங்களை அணிந்துள்ளவன். மனதைக் கவரும் வகையில் இனிமையாகப் பேசும் ஆற்றல் படைத்தவன். கோடி மன்மதர்களுக்கிணையான ஒளியுடன் விளங்குபவன். காமத்தை வளர்த்து மனதிற்கு இன்பமூட்டுபவன். யானைக்கும் அருள்புரிந்த அரங்கனிடம் இடைவிடாது மகிழ்ந்து களிப்படைவாயாக.

ஆயச்சிறுமியர்களை மயக்கத்திலாழ்த்தியவன். மது என்னும் அரக்கனை அழித்தவன். வேதங்கள், ஆகமங்கள், சாஸ்திரங்கள் எல்லாவற்றிற்கும் அடிப்படை வேர்போன்றவன். மதிக்கப்பட்ட ஹரிதாஸர்களின் பாசுரங்களில் நாட்டமுடைய அரங்கனிடம் இடைவிடாது மகிழ்ந்து களிப்படைவாயாக.

## 28

## [मानसं प्रति उपदेशः]

रञ्जनी — रूपकम्

परिमळरङ्गेशं भज
　　भज अनिशं भो मानस — [प]

सुरलोकपरिपालक - कलिकल्मषापहं
　　शरणागतरक्षक - सर्वलोकेश्वरम् — [प]

सनकादिसन्नुत - चरणारविन्दं
　　अणिमादिगुणोपेत - माद्यन्तहीनम्
मदनान्तकसंमोहन - रमणीयवेषं
　　दिनकरकुलोद्भव - वन्दिताङ्घ्रियुगम् — [प]

नरकान्तकभयवारक - नारदादिमुनिगेयं
　　वरनूपुर करशोभित - मृदुवेणुवादकम्
करवीरपारिजात - माल्याभिरामं
　　हरिदाससंमानित - परमात्मरूपम् — [प]

## 28

## மனதிற்கோர் வேண்டுகோள்

ரஞ்ஜனி — ரூபகம்

*பரிமளரங்கேசம் பஜ*
　　*பஜ அநிசம் போ மானஸ* — (ப)

*ஸுரலோகபரிபாலக கலிகல்மஷாபஹம்*
　　*சரணாகதரக்ஷக ஸர்வலோகேச்வரம்* — (ப)

*ஸனகாதிஸந்நுத சரணாரவிந்தம்*
　　*அணிமாதிகுணோபேதம் ஆத்யந்தஹீனம்*
*மதனாந்தக ஸம்மோஹன ரமணீயவேஷம்*
　　*தினகர குலோத்பவ வந்திதாங்க்ரியுகம்* — (ப)

நரகாந்தகபயவாரக நாரதாதிமுனிகேயம்
வரநூபுர கரசோபித ம்ருதுவேணுவாதகம்
கரவீரபாரிஜாத மால்யாபிராமம்
ஹரிதாஸஸம்மானித பரமாத்மரூபம் (ப)

ஏ மனமே! சிறந்த நறுமணம் கமழும் அரங்கனை இடைவிடாது துதிப்பாயாக.

அவன் தேவலோகத்தைக் காத்தருள்பவன். கலிகாலத்தின் தீய சக்திகளை அகற்றுபவன். தஞ்சமடைந்தவர்களை அருள்பாலிக்கும் அகில உலக நாயகன்.

ஸநகர் முதலியவர்களால் வணங்கப்படும் திருப்பாதகமலங்களைக் கொண்டவன். அணிமா முதலிய எட்டுவித குணங்களும் நிரம்பப் பெற்று ஆதியும் அந்தமும் இல்லாத பரமன். காமனை எரித்த பரமேச்வரனையே மயக்கமுறச் செய்த மிக அழகான வடிவமெடுத்தவன். சூரிய குலத்திலுதித்த ஸ்ரீராகவனால் வணங்கப்பட்டவன்.

நரக பயம், யமபயம் முதலியவற்றைப் போக்கடிக்கவல்ல அவன் நாரதர் போன்ற மாமுனிவர்களால் துதிக்கப்பட்டவன். பாதங்களில் ஒலித்திடும் சிலம்புகளுடன் கையில் தாங்கிடும் குழலை இனிமையாக ஊதி மகிழ்விப்பவன். கரவீரம், பாரிஜாதம் போன்ற மலர்மாலைகளை அணிந்துகொண்டு கண்ணிற்கினிமையாகத் தோற்றமளிப்பவன். ஹரிதாஸர்களால் மிகவும் போற்றப்படும் பரமாத்ம ஸ்வரூபமும் அவனேயாவான் (ஏ மனமே இப்படிப்பட்ட நறுமணம் கமழும் அரங்கனை இடைவிடாது துதிப்பாயாக)

## 29

## [आत्मसमर्पणम्]

*आनन्दभैरवी* *मिश्रम्*

**करुणापयोनिधे कस्तूरीरङ्गपते**
**शरणागतोऽस्मि तव पादमूले** **[क]**

**अरुणानुजवाह - अरविन्दलोचन**
**उरगेन्द्रकल्पित - पर्यङ्कशयन** **[क]**

**कावेरीप्रवाहेण - विकसितदेशे**
**प्राकार सप्तके - रावृतक्षेत्रे ,**

श्रृङ्गैः चतुर्भिश्चशोभितविमाने
विलसन्नितान्त - मानन्दमूर्ते [क]

संसारसागर - पतितोऽस्मि नित्यं
कामादिवर्गेण - चलितोऽस्मि सत्यम्
अज्ञानवशंगतं - हरिभक्तिविहीनं
हरिदासं तारय शोभनकटाक्षेण [क]

## 29

## சஞ்சலம் தீர்த்திட அரங்கனிடம் தஞ்சம்

ஆனந்தபைரவி மிச்ரசாபு

*கருணாபயோநிதே கஸ்தூரீரங்கபதே*
*சரணாகதோஸ்மி தவபாதமூலே (க)*

*அருணாநுஜவாஹ அரவிந்தலோசன*
*உரகேந்த்ரகல்பித பர்யங்கசயன (க)*

*காவேரீப்ரவாஹேண விகஸிததேசே*
*ப்ராகாரஸப்தகை ராவ்ருதக்ஷேத்ரே*
*ச்ருங்கை : சதுர்பி: ச சோபிதவிமானே*
*விலஸந்நிதாந்த மானந்தமூர்த்தே (க)*

*ஸம்ஸாரஸாகர பதிதோஸ்மி நித்யம்*
*காமாதிவர்கேண சலிதோஸ்மி ஸத்யம்*
*அஜ்ஞானவசங்கதம் ஹரிபக்திவிஹீனம்*
*ஹரிதாஸம் தாரய சோபனகடாக்ஷேண (க)*

*கருணைக் கடலே! கஸ்தூரி ரங்கா! உன்னுடைய திருவடிகளே சரணமென்று உன்னிடம் தஞ்சம்நாடி உன்னை வந்தடைந்துள்ளேன்.*

*அருணனுக்கு இளையோனான கருடனை வாகனமாகக் கொண்டுள்ள செந்தாமரைக்கண்ணா! அரவங்களுக்கரசனான ஆதிசேஷனால் அமைக்கப்பட்ட கட்டிலில் பள்ளிகொண்டுள்ளவனே.*

*காவிரியின் நீர்ப்பெருக்கால் பூத்துக்குலுங்கும் பிரதேசத்தில் ஏழு மதில்கள் சூழ்ந்த புண்ணியத் தலத்தில் நான்கு வேதங்களையும் சிகரங்களாகக்*

கொண்டு விளங்கிடும் விமானத்தைச் சார்ந்து ஆனந்தமே உருவாய் ஒளிவீசும் திவ்ய தேஹகாந்தியுடையவனே.

உலக வாழ்க்கையென்னும் பெருங்கடலில் வீழ்ந்து சிக்குண்டு திண்டாடும் அல்லல்படுகிறேன். காமம் முதலிய தீய சக்திகளால் நான் உண்மையாக அலைக்கழிக்கப்பட்டுள்ளேன். அறியாமைக்கு அடிமைப்பட்டு ஹரியிடன் துளிக்கூட பக்தியற்றவனாக உள்ளேன். இப்படிப்பட்ட ஹரிதாஸனை உன்னுடைய மங்களகரமான பார்வையின் மேன்மையால் கரை சேர்ப்பாயாக.

## 30

## [शरणागति पद्यम्]

गीर्वाणी | आदि

चरणयुगं तव स्मराम्यहं
सारसदळलोचन [च]

त्रिभुवनमोहन - चारुसर्वाङ्ग
निरुपमलावण्य - श्रीरङ्गनायक [च]

उभयकावेरी - मध्यप्रदेशे
कनकविभूषित - मण्डपशयन
शेषतल्पसुख - निद्रामुद्राभिराम
श्रेष्ठगुणान्वित - विभीषणार्चित [च]

गानकलाधर - त्यागराजनुत
रामचन्द्र पूज्य - रघुकुलपालक
द्राविडदेशीय - द्वादशमुनिवर -
कटाक्षितहरिदास - कामितदायक [च]

## 30

## அரங்கனிடம் அடைக்கலம் நாடல்

கீர்வாணி | ஆதி

சரணயுகம் தவ ஸ்மராம்யஹம்
ஸாரஸதள லோசன (ச)

த்ரிபுவன மோஹன சாருஸர்வாங்க
நிருபமலாவண்ய ஸ்ரீரங்கநாயக (ச)

உபயகாவேரீ மத்யப்ரதேசே
கனகவிபூஷித மண்டபசயன
சேஷதல்பஸுக நித்ராமுத்ராபிராம
ச்ரேஷ்டகுணாந்வித விபீஷணார்ச்சித (ச)

கானகலாதர த்யாகராஜநுத
ராமசந்த்ரபூஜ்ய ரகுகுலபாலக
த்ராவிடதேசீய த்வாதசமுனிவர
கடாக்ஷிதஹரிதாஸ காமிததாயக (ச)

தாமரையிதழ் போன்ற கண்களையுடையவனே! உன்னுடைய இரு பாதங்களையும் கருத்தில் கொள்கிறேன்.

மூவுலகிற்கும் மகிழ்ச்சியூட்டும் அழகிய அங்க அவயங்களுடன் விளங்குபவனே. ஈடு இணையில்லா எழில்மிக்க அரங்கா!

காவிரியின் இருகிளைகளுக்கு இடைப்பட்ட திவ்ய தேசத்தில் தங்கமயமான விமானத்தில் பள்ளிகொண்டுள்ள பரமனே. ஆதிசேஷனாகிற படுக்கையில் கள்ள உறக்கத்துடன் அழகாகக் காட்சியளிப்பவனே. மேலான குணங்கள் நிரம்பப் பெற்ற வீபிஷணாழ்வாரால் வழிபடப்பட்டவனே.

இசைக்கலையில் வல்லவரான ஸ்ரீதியாகராஜ சுவாமிகள் போற்றும் ஸ்ரீ ராமசந்திரமூர்த்தியால் வணங்கப்பட்டு சூரியகுலத்தைக் காத்தருளியவனே. திராவிட நாடாகிய தமிழகத்தில் தோன்றிய பன்னிரு ஆழ்வார்களின் மேலான அருட்பார்வைக்குள்ளான ஹரிதாஸர்களின் விருப்பங்களை நிறைவேறச்செய்பவனே. (உன்னுடைய இரு பாதங்களையும் கருத்தில் கொள்கிறேன்.)

## 31

## [मङ्गळविवाहवैभव श्रृङ्गाररङ्गेशः]

रागमालिका — कण्टचापु

[यदुकुलकाम्बोदी]

**श्रृङ्गाररसपूर्णश्रीरङ्गनायक**
**अन्तरङ्गतापं मे शमय कन्दर्पजनक** **[श्रृ]**

पङ्केरुहासन - नलिनायताक्ष
    बृन्दावनविहार - गोपाङ्गनाजार [श्री]

कौशिककटाक्षवर - पक्ष्मपातभावज्ञ
    महेशधनुर्भङ्ग - धीराग्रगण्य
जनकेन्द्रभाग्यसुता - परिपूर्णकाम
    दिनकरकुलतिलक - कल्याणराम [श्री]

[सावेरी]

विप्रमुखनिवेदित - सन्ताप सन्तप्त
    प्रेमान्धरुक्मिणी - सन्देशपात्र
समररिपुसंहार - अपहृतकन्यारत्न-
    कृतकौतुकमङ्गळ - वसुदेवनन्दन [श्री]

[बेगडा]

शेषाद्रिसञ्चार - अश्वारूढाविर्भूत
    आकाशराजकन्या - सम्मोहनापाङ्ग
धनदऋणमोचनाय प्रणतार्तिभञ्जन
    पद्मावतीमुखोल्लास - वेङ्कटरमण [श्री]

[मध्यमावती]

विष्णुचित्तकुलेजाता विश्वमोहनगोदा
    श्रीरङ्गपतिनिहित - सर्वात्मभावा
तयार्पितदिव्य - निर्माल्यसन्तुष्ट
    मङ्गळविवाहोत्सवे हरिदासनुतचरण [श्री]

## 31

## திருமணக்கோலங்களில் திருவரங்கன்

ராகமாலிகை கண்டசாபு

### (யதுகுலகாம்போதி)

*ச்ருங்காரரஸபூர்ண ஸ்ரீரங்கநாயக*
*அந்தரங்கதாபம் மே சமய கந்தர்பஜனக* *(ச்)*

பங்கேருஹாஸன நளினாயதாக்ஷ
ப்ருந்தாவனவிஹார கோபாங்கனாஜார (ச்)

கௌசிக கடாக்ஷவர பக்ஷ்மபாதபாவஜ்ஞ
மஹேசதநுர்பங்க நீராக்ரகண்ய
ஜனகேந்த்ர பாக்யஸுதா பரிபூர்ணகாம
தினகரகுலதிலக கல்யாணராம (ச்)

## (ஸாவேரீ)

விப்ரமுகநிவேதித ஸந்தாபஸந்தப்த
ப்ரேமாந்தருக்மிணீ ஸந்தேசபாத்ர
ஸமரரிபுஸம்ஹார அபஹ்ருதகன்யாரத்ன
க்ருதகௌதுகமங்கள வஸுதேவநந்தன (ச்)

## (பேகடா)

சேஷாத்ரிஸஞ்சார அச்வாரூடாவிர்பூத
ஆகாசராஜகன்யா ஸம்மோஹனாபாங்க
நன தருணமோசனாய ப்ரணதார்த்திபஞ்ஜன
பத்மாவதீமுகோல்லாஸ வேங்கடரமண (ச்)

## (மத்யமாவதி)

விஷ்ணுசித்தகுலேஜாதா விச்வமோஹனகோதா
ஸ்ரீரங்கபதிநிஹித ஸர்வாத்மபாவா
பரம தயாசார்ப்பிததிவ்ய நிர்மால்ய ஸந்துஷ்ட
மங்களவிவாஹோத்ஸவே ஹரிதாஸநுதசரண (ச்)

காமச்சுவை நிரம்பப்பெற்ற திருவரங்கா! மன்மதனை ஈன்றவனே! என்னுடைய உள்ளக் கொதிப்பைத் தணிப்பாயாக.

மலர்ந்த தாமரை மீதமர்ந்து மிகவும் அழகிய கண்களுடன் பிரகாசிப்பவனே! பிருந்தாவனத்தில் களியாட்டங்கள் புரிந்து ஆயச்சிறுமியின் (ஸ்ரீ ராதையின்) உள்ளங்கவர்ந்தவனே.

விச்வாமித்ர முனிவரின் கண்ணிமைத்தலின் ஜாடையை உணர்ந்து பரமேச்வரனின் வில்லை முறித்து வீரர்களுக்கெல்லாம் முதன்மையான இடத்தை அடைந்தவனே. ஜனகராஜரின் பாக்கியத்தால் தோன்றிய அவரது புதல்விக்கு மனநிறைவு அளித்தவனே. சூரிய குலத்தின் மேலான திலகமாகத் திகழ்ந்த கல்யாணராமனானவனே.

மனதில் எழும்பிய தாபத்தால் வாட்டமுற்று தன் அன்பை அந்தணர் மூலம் தெரிவித்த ருக்மிணியின் மடலுக்கு இலக்கானவனே. எதிரிகளைப் போரில் கொன்று கன்னிகைகளுக்குள் மிகச் சிறந்த ரத்னமாகிய அவளைக் கவர்ந்து சென்று திருமணம் செய்து கொண்ட வசுதேவனின் மனதிற்கு இன்பமூட்டியவனே.

சேஷசைலம் என்ற மலைப்பிரதேசத்தில் குதிரை மீதேறி சுற்றி வந்து ஆகாசராஜனின் பெண்ணை மயக்கியவனே. மேலும் அவளைத் திருமணம் செய்து கொள்ள குபேரனிடம் பெற்ற பெரும் கடன் தொகையை தீர்பதற்காக தன்னை வணங்குபவர்கள் குறைகளையகற்றி பத்மாவதிக்கு மனக்களிப்பூட்டும் வெங்கடரமணனானவனே.

விஷ்ணுசித்தர் (பெரியாழ்வார்) குலத்துதித்த உலகிலேயே மிகவும் அழகு வாய்ந்த ஸ்ரீ ஆண்டாள் அரங்கனிடம் தன்னை பூரணமாக அர்ப்பணித்துக் கொண்டு தான் அணிந்து கொண்ட மாலையை அவனுக்கு அணிவித்தாள். மிகுந்த உள்ளக் கனிவுடன் அவள் அளித்த அந்த மேலான மாலையை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டு அவளை மங்களகரமாக திருமணம் செய்து கொள்ளும் வைபவத்தில் ஹரிதாஸர்களால் வணங்கப்பட்ட திருவடிகளைக் கொண்டவனே.

(காமச்சுவை நிரம்பப் பெற்ற திருவரங்கனே! மன்மதனை ஈன்றவனே! என்னுடைய உள்ளத் தாபத்தை தணிப்பாயாக)

## 32

## श्रीरङ्गमङ्गलाष्टकम्

## अयिगिरिनन्दिनी गीतवत्

अण्ड - चराचर - चेतन - जडमय - चित्र - विचित्र - स्वरूप - प्रभो
दण्डित - दानव - दैत्य - कुलान्तक - आश्रित - रक्षण - दक्ष - विभो ।
मणिगण - किरण - समूह - समुज्वल - दिनकर - कोटि - प्रकाश - हरे
फणिपति - विरचित - मण्डप - माश्रित - मन्मथ - मोहन - रङ्ग - पते ।।

सुरगण - वन्दित - चरण - कमलयुग - दुरित - निवारक - सत्कीर्ते
नरवर - कोसल - पतिसुत पूजित - करिवर - वरद - कृपा - जलधे
करमुरळीरव - मृदुलहरीमय - स्वरलय - पूरित - भुवन - पते
परिजन - पालन - पाप - विनाशन - पावन - परिमळ - रङ्ग - पते ।।

गोकुल - निकट - कदम्ब - समाकुल - ज्वाला - विषमय - नील - जले
बालक - मण्डल - कोलाहल - कृत - हलहल - भीषण - क्रन्द - नुते
चञ्चल - चलचल - कालिय - फणकुल - अद्भुत - कल्पित - रङ्ग - तले
झलझल - नूपुर - किङ्किणि - घोषित - नटन - कलाधर - रङ्ग - पते

हिमगिरि - तुल्य - महत्व - महोन्नत - सह्यक - श्रृङ्ग - विहार - रता
कुम्भ - महामुनि - दण्ड - कमण्डुलु - वारि- प्रवाहिनी - सह्य - सुता
तुङ्ग - निरर्गळ - तरळित - स्वोघ - ससंभ्रमा - लिङ्गित - द्वीप - गत
पङ्कज - हार - सुशोभित - तनुवर - शंकर - मोहित - रङ्ग - पते

क्षीर - समुद्र - समागत - सुरकुल - असुर - परस्पर - मथन - कृते
सार - सुधारस - शीतळ - हिमकर - कल्पक - मणिवर - कान्ति - युते
आश्रित - मङ्गळ - भाग्य - प्रदायक - चारु - तरस्मित - रमा - मुखे
निरन्तर - लम्बित - लोलित - लोचन - परमा - नन्दद - रङ्ग - पते

बृन्दा - वनवर - काळिन्दी - तट - पुळिन - मनोहर - पुण्य - भुवि
आनन्दा - मृत - वर्षक - चन्द्रो - न्मादन - दीपन - पूर्ण - निशि
मञ्जु - लतावृत - कुञ्ज - गृहान्तर - व्रजनारी - जन - मोद - कर
श्रृङ्गा - रान्वित - क्रीडा - तत्पर - रास - रसामृत - रङ्ग - पते

मकर - मनोहर - कुण्डल - मण्डित - स्मितमुख - अभिनव - कान्ति - मय
मरकत - मणिसर - माला - रञ्जित - हृदय - तलोपरि - हार - युत
कटक - विराजित - कङ्कण - भूषित - केयू - रान्वित - बाहु - युत
वरदा - (अ)भयप्रद - मुद्रा - हस्तक - भक्त - जनप्रिय - रङ्ग - पते

शिकर - शिरोरुह - मकुटा - लाम्बित - शिखण्टक - पिच्छा - वळि - धाम
कस्तूरी - कृत - तिलक - मनोहर - नेत्रानन्दक - मुख - सोम
केसरि - सर्प - समुन्नत - गतियुत - नित्य - महोत्सव - रमण - हरे
यति - मनसा - मपि - रञ्जित - वैभव - मङ्गळदायक - रङ्ग - निधे

वेदनुत - पाद - सरोज - दळाङ्घ्रियुग - कोमळ - शुभाङ्ग - मदन
नादमय - गीतरस - पान - सुकलारत - वेणु - रवामृत - लोल - नयन
क्षिप्रगत - विप्रकुल - मित्रवर - कुचेलक - अचिन्तित - अपार - धन - प्रतरण
सारमय - प्रेमरस - पूर्वकृत - शठारिमुनि - कीर्तन - वशंगत - रङ्ग - रमण

[फलश्रुतिः]

अच्युत - कटाक्षित - हरिदास - कृत - अभीष्टप्रद - मङ्गकर - मष्टक - मिदं
महातिशय - वाञ्चित - फलो - दय - मनोभव - मुदान्वित - मानवः - यःपठेत्
काममद - मोह - वश - सञ्जनित - समस्तविध - घोरतर - पापफल - मुक्तः
कान्तिमय- अष्टविध - भोगसुख - कीर्तिमपि - शान्तिमय - रङ्गपति - पूज्यपद
माप्नुयात्

इति श्री वैजयन्ती समाप्ता

शुभं

## 32

## ஸ்ரீ ரங்க மங்காஷ்டகம்

### (அயிகிரிநந்தினி மெட்டு)

*அண்ட சராசர சேதன ஜடமய சித்ர விசித்ர ஸ்வரூப ப்ரபோ
தண்டித தானவ தைத்யகுலாந்தக ஆச்ரித ரக்ஷண தக்ஷவிபோ
மணிகண கிரண ஸமூக ஸமுஜ்வல தினகர கோடி ப்ரகாசஹரே
பணிபதி விரசித மண்டப மாச்ரித மன்மத மோஹன ரங்கபதே*

*ஸுரகணவந்தித சரண கமலயுக துரித நிவாரக ஸத்கீர்த்தே
நரவர கோஸல பதிஸுத பூஜித கரிவர வரத க்ருபாஜலதே
கரமுரளீரவ ம்ருதுலஹரீமய ஸ்வரலய பூரித புவனபதே
பரிஜனபாலன பாப வினாசன பாவன பரிமள ரங்கபதே*

*கோகுல நிகட கதம்ப ஸமாகுல ஜ்வாலா விஷமய நீலஜலே
பாலக மண்டல கோலாஹலக்ருத ஹலஹல பீஷணக்ரந்தநுதே
சஞ்சல சலசல காளியபணகுல அத்புத கல்பித ரங்கதலே
ஜலஜல நூபுர கிங்கிணி கோஷித நடன கலாதர ரங்கபதே*

*ஹிமகிரிதுல்ய மஹத்வ மஹோன்னத ஸஹ்யக ச்ருங்க விஹார ரதா
கும்ப மஹாமுனி தண்ட கமண்டுலு வாரி ப்ரவாஹினீ ஸஹ்யஸுதா
துங்கநிரர்கள தரளித ஸ்வோக ஸஸம்ப்ரமாலிங்கித த்வீபகத
பங்கஜ ஹார ஸுசோபித தநுவர சங்கர மோஹித ரங்கபதே*

*க்ஷீரஸமுத்ர ஸமாகத ஸுரகுல அஸுர பரஸ்பர மதன க்ருதே
ஸாரஸுதாரஸ சீதள ஹிமகர கல்பக மணிவர காந்தியுதே
ஆச்ரித மங்கள பாக்ய ப்ரதாயக சாருதரஸ்மித ரமாமுகே
நிரந்தர லம்பித லோலித லோசன பரமானந்தத ரங்கபதே*

ப்ருந்தாவனவர காளிந்திதட புளின மனோஹர புண்ய புவி
ஆனந்தாம்ருத வர்ஷக சந்த்ரோன் மாதன நீபன பூர்ண நிசி
மஞ்சு லதாவ்ருத குஞ்சக்ருஹாந்தர வ்ரஜநாரீஜன மோதகர
ச்ருங்காரன்வித க்ரீடாதத்பர ராஸரஸாம்ருத ரங்கபதே

மகர மனோஹர குண்டல மண்டித ஸ்மிதமுக அபிநவ காந்திமய
மரகத மணிஸர மாலா ரஞ்சித ஹ்ருதய தலோபரி ஹாரயுத
கடக விராஜித கங்கண பூஷித கேயூரான்வித பாஹுயுத
வரதாபயப்ரத முத்ராஹஸ்தக பக்த ஜன ப்ரிய ரங்கபதே
சிகர சிரோருஹ மகுடாலம்பித சிகண்டக பிச்சாவளிதாம
கஸ்தூரீக்ருத திலக மனோஹர நேத்ரானந்தக முகஸோம
கேஸரி ஸர்ப்ப ஸமுன்னத கதியுத நித்யமஹோத்ஸவ ரமணஹரே
யதிமனஸாமபி ரஞ்சிதவைபவ மங்களதாயக ரங்கநிதே

வேதநுத பாதஸரோஜ தளாங்க்ரியுக கோமள சுபாங்க மதன
நாதமய கீதரஸ பரனஸு கலாரத வேணுரவாம்ருத லோல நயன
க்ஷிப்ரகத விப்ரகுல மித்ரவர குசேலக அசிந்தித அபாரதன ப்ரதரண
ஸாரமய ப்ரேமரஸ பூர்வக்ருத சடாரிமுனி கீர்த்தன வசங்கத ரங்க ரமண

## (பலச்ருதி)

அச்யுத கடாக்ஷித ஹரிதாஸக்ருத அபீஷ்டப்ரத மங்களகர
மஷ்டகமிதம்
மஹாதிசய வாஞ்சித பலோதய மனோபவமுதான்வித மானவ : ய :
படேத்
காமமத மோஹவச ஸஞ்ஜனித ஸமஸ்தவித கோரதர பாபபல முக்த:

காந்திமய அஷ்டவித போகஸுக கீர்த்திமபி சாந்திமய

ரங்கபதி பூஜ்யபதமாப்னுயாத்

**சுபம்**

## ஸ்ரீ ரங்க மங்களாஷ்டகம்

அசையும் பொருள்கள், அசைவற்றவை, உயிருள்ளவை, உயிரற்றவை என பலதரப்பட்ட விநோதமான பொருள்களடங்கிய இந்த பேரண்டத்தின் ஸ்வரூபமாக உள்ள பிரபுவே! அரக்கர்கள், ராட்சதர்கள் கூட்டங்களை

தண்டித்தும், மாய்த்தும், அண்டியவர்களைக் காத்தருள்வதில் கைதேர்ந்தவனே. மேலான இரத்தினங்களின் ஒளிக்கூட்டங்களால் கோடி சூரியப் பிரகாசமாய் விளங்கும் ஹரியே! ஆதிசேஷனால் அமைக்கப்பட்ட மண்டபத்தை சார்ந்துள்ள மன்மதனையே மயக்கவல்ல அரங்கா.

தேவக் கூட்டங்களால் வணங்கப்பட்ட இருதிருவடித்தாமரைகளுடன் கூடி மக்களின் துயரங்களை போக்கடிக்கும் புகழ் பொருந்தியவனே. மனித குலத்தில் உத்தமனாயுதித்த கோசல நாட்டு மன்னனின் மைந்தனால் வழிபடப்பட்டு யானைக்கும் அருள்புரிந்த கருணைக் கடலே. கையில் தவழும் குழலிலிருந்து வெளிவரும் ஸ்வரங்கள், தாளங்களின் கட்டுக்கள் இவைகளுடன் கூடிய இசை அலைகளால் உலகத்தையே சூழச்செய்பவனே. அன்பர்களின் பாபங்களைப் போக்கி அவர்களைக் காத்தருளும் தூயோனே. நறுமணம் கமழும் அரங்கா.

கோகுலத்தையடுத்து கதம்ப மரங்களால் சூழப்பட்டதும், விஷம் கலந்ததுமான பொய்கையின் நீல நிறமான நீரில் கோபாலர்களுடன் விளையாடும் பொழுது அவர்களால் (பயத்தால் கூக்குரல் எழுப்பப்பட்டு) பரிதாபத்துடன் துதிக்கப்பட்டவனே! நிலையற்று அசைந்தசைந்தாடிக் கொண்டிருக்கும் காளியனின் படமெடுத்த தலைகளை வினோதமான அரங்கமேடையாகக் கொண்டு பாதஸரங்கள் 'ஜலக்' ஜலக்'கென்று ஒலிக்க நடனமாடிய ரங்கநாயகா.

இமயமலைக்கு இணையான பெருமைவாய்ந்த உயரமான அகத்திய மலைச்சிகரங்களில் துள்ளிவிளையாடி களியாட்டங்கள் புரிந்து குடமுனிவரின் தண்டம், கமண்டுவிலிருந்து பின்னர் பெருக்கெடுத்து வரும் காவிரியின் தெளிந்த நீரின் வெள்ளத்தால் தழுவப்படுவது போன்று விளங்கும் திட்டில் தாமரை மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட மேனியழகுடன் சாக்ஷாத் பரமேச்வரனையே பரவசமடையச்செய்த அரங்கா.

பாற்கடலின் கரையை அடைந்த தேவர்கள் கூட்டங்களும், அசுரர்கள் படைகளும் ஒன்று சேர்ந்து அக்கடலைக்கடைந்த பொழுது அதிலிருந்து வெளிவந்த அமிர்தம், சந்திரன், கற்பக விருக்ஷம், சிந்தாமணிக்கல் இவை எல்லாவிற்றிற்கும் மேலாக, காந்தியுடன் கூடி அண்டியவர்களுக்கு எல்லாவித மங்களங்களையும் வளர்க்க வல்ல திருமகளின் புன்முறுவல்பூத்த திருமுக மண்டலத்திலேயே தன் பார்வையைப் பதித்து அங்கேயே வட்டமிட்டுக் கொண்டிருக்கும் கண்ணழகுடன் கூடி பரமானந்தம் அளிக்கும் அரங்கா.

மேலான யமுனையாற்றின் கரையிலமைந்த பிருந்தாவனத்தின் புனிதமான புல்தரையில் ஆனந்தமளிக்கும் அமிர்தம்தோய்ந்த நிறைமதி ஒளிவீசும் பௌர்ணமி இரவில் அழகிய கொடிகளால் சூழப்பட்ட புதர்களிடையில் ஆயச்சிறுமியர்களுக்கு களிப்பூட்டும் வகையில் ராஸக்ரீடையில் ஈடுபட்ட அரங்கா.

மகரகுண்டலங்களால் அழகுபடுத்தப்தபட்டதும், மாறி மாறி புதிய பொலிவுடன் கூடியதுமான புன்முறுவல்பூத்த முகமண்டலத்துடன் கூடியவனே. மரகதம், இரத்தினங்கள், மலர்கள் முதலியவற்றாலான மாலைகளை மார்பில் அணிந்துகொண்டு, கடகம், கங்கணம், கேயூரம் முதலிய அணிகலங்களைத் தாங்கிடும், வரதமுத்ரை, அபயமுத்ரையுடன் கூடிய இரு கரங்களுடன் சிறந்து விளங்கும் அரங்கா.

தலைமுடிபாகத்தின் குழற்கற்றைகள் மீது விளங்கும் கிரீடத்திலிருந்து தொங்கும் அழகிய மயிற்பீலியின் ஒளியுடனும், மனதைக்கவரும் கஸ்தூரீ பொட்டழகுடனும் கண்களுக்கு மகிழ்ச்சியூட்டிடும் சந்திரன் போன்ற திருமுக மண்டலத்தையுடையவனே. சிம்மம், அரவம் முதலியவற்றின் நடையழகுடன் எப்பொழுதும் களிப்புடன் விளங்குபவனே. முற்றும் துறந்த துறவிகளின் மனதையும் கவர்ந்த மங்கள மயமான அரங்கத்துப் பெரும் செல்வமே.

மறைகளால் வணங்கப்பட்ட தாமரைபோன்ற இரு பாதங்களுடனும் அழகிய அவயவ அமைப்புடனும் மன்மதனைப்பழிப்பவனே. குழலிசையின் நாதமயமான கீதங்களின் சுவையுணர்ந்து அனுபவித்து மெய்மறந்த நிலையில் வட்ட மிடும் கண் பார்வைகளுடன் கூடியவனே. திடீரென்று உன்னறுகாமை வந்தடைந்த அந்தன நண்பனான குசேலருக்கு எண்ணிப் பார்க்கமுடியாத அளவிற்கு பெரும் செல்வத்தை வாறி வாறி வழங்கியவனே. பக்தி ரஸம் ததும்பும் நம்மாழ்வாரின் பாசுரங்களுக்கு கட்டுப்பட்டுள்ள அரங்கா.

அச்சுதனுடைய மேலான கடாக்ஷத்தால் ஹரிதாஸன் இயற்றிய இந்த மங்களாஷ்டகத்தை உயர்ந்த நற்பயன்களை அடைய விரும்பும் யாரும் மனமுவந்து பாராயணம் செய்வார்களேயானால், காமம், மோகம் முதலியவற்றால் தூண்டப்பட்டு அவர்கள் செய்துள்ள பாபச் செயல்களின் பயங்கர விளைகளிலிருந்து விடுபடுவார்கள். மேலும் அவர்கள் எட்டுவித ஐச்வர்யங்களையும் பெற்று எல்லாவித இன்பங்களையும் அடைந்து பெரும் புகழுடன் வாழ்வார்கள். உலக வாழ்கையின் முடிவில் சாந்திமயமான அரங்கனது ஸாயுஜ்ய பதவியும் பெற்று நிலையான ஆனந்தம் நிறம்பப் பெற்று இன்பநிலை எய்துவாரர்கள்.

ஸ்ரீ வைஜயந்தி முற்றுப் பெற்றது

சுபம்

# श्री गीतसुधातरङ्गिणी

1

## ओंकार गणपति ध्यानम्

*हम्सध्वनि* *आदि*

ओंकार गणपतिं भावये
    विघ्नविनाशक - चण्डप्रचण्डम् [ओं]

पङ्केरुहासन - गङ्गात्मजं वरदं
    इन्द्रादिवन्दित - लम्बोदरं हरम् [ओं]

अण्डचराचर - आश्रयभूतं
    करुणारसभर - पूर्णेन्दुवक्त्रम्
पुरारिप्रियतम - प्रमथगणाधिपं
    भक्तानुग्रहं हरिदासार्चितं विभुम् [ओं]

[मध्यमकालः]

मुक्ताहार - विभूषितकण्टं
    मालालङ्कृत - विशालगात्रम्
किरीटकुण्डल - मनोज्ञरूपं
    त्रिलोकरक्षण - समानरहितम् [ओं]

௨

# கீத ஸுதா தரங்கிணீ

## ஓம்கார கணபதி தியானம்

ஹம்ஸத்வனி ஆதி

*ஓம்கார கணபதிம் பாவயே*
    *விக்ன விநாசக சண்டப்ரசண்டம் (ஓம்)*

*பங்கேரு ஹாஸன கங்காத்மஜம் வரதம்*
    *இந்திராதி வந்தித லம்போதரம் ஹரம் (ஓம்)*

*அண்டசராசர ஆச்ரயபூதம்*
*கருணாரஸபர பூர்ணேந்துவக்த்ரம்*
*புராரி ப்ரியதம ப்ரமத கணாதிபம்*
*பக்தானுக்ரஹம் ஹரிதாஸார்ச்சிதம் விபும்* (ஓம்)

**மத்யமம்**

*முக்தாஹார விபூஷித கண்டம்*
*மாலாலங்க்ருத விசாலகாத்ரம்*
*கிரீடகுண்டல மனோஜ்ஞரூபம்*
*த்ரிலோகரக்ஷண ஸமானரஹிதம்* (ஓம்)

*ஓம்கார (ப்ரணவ எழுத்தின்) வடிவமாக உள்ள கணநாதனை வழிபடுகிறேன். அவர் உலக மக்களுக்கு ஏற்படும் இடர்களைக் களைந்தெரிவதில் பெரும் சூராவளி போன்றவர்.*

*தாமரை (பத்ம) ஆஸனத்தில் அமர்ந்து வரங்களை அளிக்க வல்ல அவர் கங்கையின் புதல்வராவார். இந்திரன் முதலியவர்களாலும் வணங்கப்படுபவர். பெருவயிறு படைத்தவர்.*

*அசையும், பொருள்கள், அசைவற்றவை அனைத்தும் அடங்கிய இந்த பேரண்டத்திற்கு ஒரே புகலிடமாக உள்ளவர். கருணை நிரம்பியவர். நிறைமதி போன்ற முகம் படைத்தவர். பக்தர்களைக் காத்து அருள்பாலிப்பவர். ஹரிதாஸர்களால் போற்றப்படும் ஞானச்சுடர்.*

*முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட கழுத்தையும், மாலைகளால் அழகுபடுத்தப்பட்ட பரந்த உடலமைப்பையும் கொண்டவர். கிரீடம் குண்டலங்கள் முதலிய ஆபரணங்களை அணிந்து கொண்டு கவர்ச்சிகரமாகத் தோற்றமளிப்பவர். முவ்வுலகங்களையும் காத்தருள்வதில் தன் நிகரற்றவர். (இப்படிப்பட்ட கணநாதனை நான் வழிபடுகிறேன்.)*

**2**

## वेङ्कटाद्रिश्रृङ्गवास श्रीनिवासः

*तोडी या बेगडा* *कण्टचापु*

**वेङ्कटाद्रि श्रृङ्गवास - विश्वन्द्य श्रीपते**
**दासवर्गपरित्राण - परमकरुणानिधे** [वे]

पङ्कजासनादिविनुत - निगमागमवेद्य
सकलजन मनोहरण - शर्वरीशवदन [वे]

श्यामलाङ्ग दिव्यरूप - सामजवरगमन
सारसाक्षवीक्षणेन - पापतापनिवारक
सामवेदगानमग्न - शान्तरसपरिपूर्ण
शंकरादि सेव्यमान - सर्वलोकनायक [वे]

सारपुष्करणीतीर - नित्यवासतत्पर
पुण्यनाम कीर्तनेन - भोगमोक्षदायक
विमलवक्षस्थलविहार - विजयपद्माविलोल
मधुरगानरसपूर्ण - हरिदासार्चितोत्तम [वे]

## 2

## அகில உலகநாயகன் திருப்பதி ஸ்ரீனிவாஸன்

பேகடா அல்லது தோடி — கண்ட சாபு

*வெங்கடாத்ரி ச்ருங்கவாஸ விச்வவந்திய ஸ்ரீபதே*
*தாஸவர்க்க பரித்ராண பரமகருணாநிதே* (வெ)

*பங்கஜாஸனாதி விநுத நிகமாகமவேத்ய*
*ஸகலஜன மனோஹரண சர்வரீசவதன* (வெ)

*ச்யாமளாங்க திவ்யரூப ஸாமஜவரகமன*
*ஸாரஸாக்ஷ வீக்ஷணேன பாபதாப நிவாரக*
*ஸாமவேத கானமக்ன சாந்தரஸபரிபூர்ண*
*சங்கராதி ஸேவ்யமான ஸர்வலோகநாயக* (வெ)

*ஸார புஷ்கரிணீ தீர நித்யவாஸதத்பர*
*புண்யநாம கீர்த்தனேன போகமோக்ஷதாயக*
*விமலவக்ஷஸ்தலவிஹார விஜயபத்மாவிலோல*
*மதுரகான ரஸபூர்ண ஹரிதாஸார்ச்சிதோத்தம* (வெ)

**அகில உலகத்தாராலும் வணங்கப்படும் பெருமை வாய்ந்த திருப்பதிமலை மீது உறைந்திடும் ஸ்ரீனிவாஸா. அண்டினோர்கள் இடர்களை போக்கடிக்கும் மேலான கருணையுள்ளம் நிறம்பப் பெற்றவனே.**

தாமரையை இருக்கையாகக் கொண்ட பிரும்மதேவரால் துதிக்கப்பட்டு வேதங்கள், ஆகமங்கள் மூலம் அறியப்படுபவனே. அனைத்து மக்களின் மனதைக் கவரும் சந்திரன் போன்ற முகம் படைத்தவனே.

நீலமேனியுடன் அழகிய உருவம் கொண்டுள்ளவனே. மேலான நடையழகுடன் கூடியவனே. கருணையுணர்ச்சி ததும்பும் பார்வையால் மக்களின் வினைப்பயன்கள், மனச் சஞ்சலம் முதலியவற்றைத் தீர்ப்பவனே. ஸாமவேதத்தின் இனிய நாதத்தில் ஈடுபட்டு சாந்தமே உருவானவனே. சங்கரன் முதலியவர்களால் துதிக்கப்பட்டு எல்லா உலகத்திற்கும் பெரும் தலைவனாக விளங்குபவனே.

சுவையுள்ள நீருடன் கூடிய பொய்கையின் கரையில் நிலைத்திருப்பதில் நாட்டம் கொண்டவனே. உனது புண்யநாமாக்களை உச்சரிப்பதனாலேயே இம்மை, மறுமை, இரண்டிற்கும் வேண்டிய நற்பலன்களை நல்குபவனே. தூய்மையான உனது மார்பில் திருவிளையாடல்கள் புரிந்து வரும் திருமகளிடம் பெரும் நாட்டம் கொண்டவனே. இனிய இசையின்பம் நிரம்பப்பெற்ற ஹரிதாஸர்களால் போற்றப்படும் மேலோனே.

3

## गुणशीलपुरविहार श्रीनिवासः

*मोहनम् या सावेरी या कांबोदी* — *आदि*

गुणशीलपुरवास - दयानिधे
मॉं पाहि देवेश श्रियःपते [गु]

अणिमादि - गुणपूर्ण - प्रभो मुरारे
नरकादिभयहर - नारायण हरे [गु]

हेमापगातीर - विहारकीर्ते
पीताम्बरावृत - मोहनमूर्ते
पद्मालयाश्लिष्ट - आनन्दपूर्ते
योगीन्द्रहृद्पद्म - मार्ताण्डस्फूर्ते [गु]

पूर्णेन्दुप्रतिमान - वदनारविन्दे
मन्दस्मितेनैव - सम्भाषमाण
करुणाप्रवाहेण - कटाक्षलक्ष्म्या
हरिदासपाल - नानुग्रहपूर्ण [गु]

3

## குணசீலத்தில் உறைந்திடும் கருணைக்கடலான ஸ்ரீனிவாஸன்

மோகனம், ஸாவேரீ, காம்போதி ஆதி

*குணசில புரவாஸ தயாநிதே*
*மாம் பாஹி தேவேச ச்ரிய: பதே* (கு)

*அணிமாதி குணபூர்ண ப்ரபோ முராரே*
*நரகாதி பயஹர நாராயண ஹரே* (கு)

*ஹேமாபகாதீர விஹார கீர்த்தே*
*பீதாம்பராவ்ருத மோஹன மூர்த்தே*
*பத்மாலயாச்லிஷ்ட ஆனந்த பூர்த்தே*
*யோகீந்த்ர ஹ்ருத்பத்ம மார்த்தாண்டஸ்பூர்த்தே* (கு)

*பூர்ணேந்து ப்ரதிமான முகாரவிந்தே*
*மந்தஸ்மிதேனைவ ஸம்பாஷமாண*
*கருணாப்ரவாஹேண கடாக்ஷலக்ஷ்ம்யா*
*ஹரிதாஸபாலன அநுக்ரஹபூர்ண* (கு)

*ஸ்ரீகுணசீல திருத்தலத்தை உறைவிடமாகக் கொண்ட கருணைக் களஞ்சியமே. திருமகள் நாயகனாகவும், தேவர்களின் தலைவருமான நீர் என்னைக் காத்தருள்புரிவீராக.*

*அணிமா முதலிய மேலான ஸித்திகள் நிரம்பப்பெற்று "முரன்" என்னும் அசுரனை ஸம்ஹாரம் செய்த ப்ரபுவே. நரகம் முதலிய கோரமான வேதனைகளிலிருந்து தடுத்தாட்கொள்ளும் நாராயணனே! ஹரியே!*

*பொன்னி நதிக்கரையின்மீது திருவிளையாடல்கள் பல புரிந்து நிரம்பிய புகழ்பெற்றவரே! பீதாம்பரம் என்ற உயர்ந்த ஆடையுடன் வசீகரமான தோற்றத்துடன் கூடியவரே. திருமகளால் தழுவப்பட்டு ஆனந்தப் பெருக்குடன் விளங்குபவரே! யோகிகள் மனதுகளாகிய தாமரைகளுக்கு புத்துணர்வூட்டும் ஆதவனே!*

*நிறைமதியை பழித்திடும் உமது திருமுக மண்டலத்தில் தவழும் புன்னகையுடன் உரையாடுவது போல் தோற்றமளிப்பவரே. கருணை வெள்ளம் கரைபுரண்டோடும் பார்வையின் அழகால் ஹரிதாஸர்களை அருள் பாலிப்பதில் முழு உள்ளம் கொண்டுள்ளவரே (என்னைக் காத்தருள் புரிவீராக)*

4

## श्री पद्मावतीसमेतस्वयमुदित श्रीनिवासः

वेहाग् रूपकम्

स्वयमुदितश्रीनिवास अखिललोकनायक
समस्तभक्तदुरितहरण - परमकरुणालय [स्व]

भवभयार्णव घोर - पतितचेतनतारक
सततसाधुजनसन्त्राण - सत्यफलदायक [स्व]

कमलललित कामजनक - मृदुमन्दहासवदन
कनकरचितमणिरुचिर - तरळहारमदन
वेदगीतसारभूत - शान्तरसपरिपूर्ण
विमलवक्षस्थलविहार - विजयपद्मावतीरमण [स्व]

अमृततुल्यसलिलपूर्ण - अमरावतीसमीपं
रमणीसहित रन्तुकाम त्वमागतोऽसि किं प्रभो ?
शेषशैल समारोढुं - शक्तिहीन मानवान्
उतरक्षणार्थमागतोसि हरिदासविनुतचरण [स्व]

4

## தான்தோன்றி அருளாளன்

பேஹாக் ரூபகம்

ஸ்வயமுதித ஸ்ரீனிவாஸ அகிலலோக நாயக
ஸமஸ்த பக்த துரிதஹரண பரமகருணாலய (ஸ்)

பவபயார்ணவ கோர பதிதசேதன தாரக
ஸததஸாது ஜனஸன்த்ராண ஸத்யபல தாயக (ஸ்)

கமலலலித காமஜனக ம்ருதுமந்தஹாஸவதன
கனகரசித மணிருசிர தரளஹார மதன
வேதகீத ஸாரபூத சாந்தரஸபரிபூர்ண
விமலவக்ஷஸ்தல விஹார விஜய பத்மாவதீரமண (ஸ்)

அம்ருததுல்ய ஸலிலபூர்ண அமராவதீஸமீபம்
ரமணீஸஹித ரந்துகாம த்வமாகதோஸி கிம் ப்ரபோ?
சேஷசைல ஸமாரோடும் சக்திஹீன மானவான்
உத ரக்ஷணார்த்த மாகதோஸி ஹரிதாஸவிநுத சரண (ஸ்)

உலகங்களனைத்திற்கும் நாயகனாயுள்ள தானே தோன்றிய ஸ்ரீனிவாஸா! அண்டினோர்கள் அனைவரின் விக்னங்களையும் இடையூறுகளையும் தகர்க்கவல்ல மேலான கருணையின் உறைவிடமாயுள்ளவனே.

பெருங்கடலுக்கொப்பான பயங்கரமான உலகவாழ்க்கையில் விழுந்து சிக்குண்ட மாந்தர்களை கைதூக்கிவிட்டு கரைசேரும்படி செய்பவனே. எப்பொழுதும் ஸாதுக்களாகிய மகான்களைக் காத்தருள்புரிந்து நிலையான பலன்களை அளிப்பவனே.

தாமரை போன்ற அழகுடன் கூடியதும், இன்ப உணர்ச்சிகளைத் தூண்டிவரும் இளம் புன்னகை தவழக்கூடியதுமான முகத்தையுடையவனே. உயர்ந்த ரத்தினங்கள் பொருத்தப்பட்டு தங்கத்தால் இழைக்கப்பட்ட அசைந்தாடும் மாலையுடன் விளங்கும் மன்மதனே. உயர் மறைகளின் ஸாரமான பெரும் அமைதி நிரம்பப் பெற்றவனே. உமது தூய்மையான மார்புப் பக்கத்தை தனது விளையாட்டிடமாகக் கொண்ட திருமகளான பத்மாவதியின் மனதிற்கு ஆனந்தம் அளிப்பவனே.

ஆசை நாயகியுடன் தனிமையை நாடி அமிர்தம் போன்ற தெளிந்த நீருடன்கூடிய அமராவதி நதிக்கரையை வந்தடைந்துள்ளீரா? அல்லது திருப்பதியில் உள்ள ஏழுமலைகள் மீதேறிவர சக்தியற்ற அன்பர்களைக் காத்தருள இங்கு வந்துள்ளீரா? ஹரிதாஸர்களால் போற்றப்படும் சரணகமலங்களைக் கொண்டவனே.

## 5

## श्री गुरुगुहस्वरूपस्वामिनाथः

*धन्यासी* *आदि*

चिन्तयाम्यहं शक्तिधरं
श्री-स्वा-मि-ना-थम् [चि]

सुन्दर तनुवर - मोहनविग्रहं
चारुतरस्मित - वदनारविन्दम् [चि]

वेदान्तागम - शास्त्र प्रमाणं
देवगणार्चित - पादसरोजम्

घोरनिशाचर - तारकमारकं
शूरसंहारक - देवसेनापतिम् [चि]

कालातीत - महेश्वर पुत्रं
मालालङ्कृत - बालस्वरूपिणम्
प्रणवमन्त्राक्षर - तत्वप्रकाशकं
पालितहरिदास - गुरुगुहमीश्वरम् [चि]

## 5

## குரு குஹனான சுவாமிநாதன்

தன்யாசி ஆதி

*சிந்தயாம்யஹம் சக்திதரம்*
*ஸ்ரீ ஸ்வாமி நாதம் (சி)*

*ஸுந்தர தநுவர மோஹன விக்ரஹம்*
*சாருதரஸ்மித வதனாரவிந்தம் (சி)*

*வேதாந்தாகம சாஸ்த்ர ப்ரமாணம்*
*தேவகணார்ச்சித பாத ஸரோஜம்*
*கோர நிசாசர தாரகமாரகம்*
*சூரஸம்ஹாரக தேவஸேனா பதிம் (சி)*

*காலாதீத மஹேச்வர புத்ரம்*
*மாலாலங்க்ருத பாலஸ்வரூபிணம்*
*ப்ரணவ மந்த்ராக்ஷர தத்வப்ரகாசகம்*
*பாலித ஹரிதாஸ குருகுஹமீச்வரம் (சி)*

*சக்தி ஆயுதமாகிய வேலைத்தாங்கிடும் ஸ்ரீசுவாமிநாதமூர்த்தியை சிந்தனை செய்கிறேன்.*

*அழகிய உடலமைப்புடன் கூடிய அவன் கவர்ச்சிகரமான மேனி படைத்தவன். உள்ளத்தை கொள்ளை கொள்ளும் புன்சிரிப்புடன் கூடிய தாமரை போன்ற முகம் படைத்தவன்*

மறைகளின் முடிகள், ஆகமங்கள், சாஸ்த்திரங்கள் எல்லாவற்றிற்கும் இறுதியான நிரூபணமாக உள்ளவன். தேவர்கள் கூட்டங்களால் போற்றப்படும் சரணகமலங்களைக் கொண்டவன். தாரகன் என்ற கொடிய அரக்கனை மாய்த்து சூரபத்மனையும் கொன்றவன். தேவர்களின் படைத்தலைவன்.

காலத்திற்கப்பாற்பட்ட பரமேச்வரனின் புதல்வன். மாலைகளால் அழகுபடுத்தப்பட்டு குழந்தை வடிவத்துடன் விளங்குபவன். ப்ரணவ மந்திரத்தின் உட்பொருளை எடுத்து விளக்கியவன். ஹரிதாஸனைக் காக்கும் குருவாகவும், குஹனுகவுமுள்ள தேவன்.

## 6

## अम्बुमध्यवासी श्री जम्बुनाथः

*केदारगौळम्* — *कण्टचापु*

गजारण्यनाथं भजाम्यहं अनिशं [ग]

भुजङ्गपरिवाराश्रित - नादमयगात्रं
स्पटिकाक्षमालाधर - योगयोगेश्वरम् [ग]

कालहरणदेवं - सकलवेदसारं
बिल्वार्पणेनैव - वाञ्छितदायकम्
मौळिविलसितार्ध - कलाधीशशेखरं
विमलकावेरी - सलिलोद्भववैभवम् [ग]

जम्बूफलसार - आस्वादननिरतं
अम्भोजदळसमान - चारुनेत्रम्
पञ्चभूतस्वरूप - अम्बुमध्यवासिनं
इन्द्रादिदेवनुत - पादपङ्केरुहम् [ग]

[मध्यमकालः]

तन्तुवायकृत - मण्डपवासिनं
दन्तिराजकर - कृताभिषेचनम्
बन्धपाशहत - हरिदासरक्षकं
वन्दिताखिल - भुवनेश्वरीसमेतम् [ग]

## 6

# அப்புலிங்க வடிவம் கொண்ட ஜம்புநாதர்

கேதாரகௌளம் கண்டசாபு

*கஜாரண்ய நாதம் பஜாம்யஹம்*
*அநிசம்* (க)
*புஜங்க பரிவாராச்ரித நாதமய காத்ரம்*
*ஸ்படிகாக்ஷ மாலாதர யோகயோகேச்வரம்* (க)

*காலஹரணதேவ ஸகலவேத ஸாரம்*
*பில்வார்ப்பணேனைவ வாஞ்சிததாயகம்*
*மௌளிவிலஸிதார்த்த கலாநீச சேகரம்*
*விமலகாவேரீ ஸலிலோத் பவவைபவம்* (க)

*ஜம்பூபலஸார ஆஸ்வாதன நிரதம்*
*அம்போஜதளஸமான சாருநேத்ரம்*
*பஞ்சபூதஸ்வரூப அம்புமத்ய வாஸினம்*
*இந்த்ராதிதேவநுத பாதபங்கேருஹம்* (க)

## (மத்யம காலம்)

*தந்துவாயக்ருத மண்டப வாஸினம்*
*தந்திராஜகர க்ருதாபிஷேசனம்*
*பந்தபாசஹத ஹரிதாஸரக்ஷகம்*
*வந்திதாகில புவனேச்வரீ ஸமேதம்* (க)

கஜாரண்யம் எனப்படும் திருவானைக்கோயில் தலத்தில் உறைந்திடும் ஜம்பு நாதரை நான் இடைவிடாது போற்றுகிறேன்.

அவர் ஸர்பங்களின் கூட்டங்களால் சூழப்பட்ட நாதமயமான உடலுடன் கூடியவர். ஸ்படிக மாலையைக் கையிலேந்திக் கொண்டு யோகிகளுக்கெல்லாம் மேலான யோகியாகத் திகழ்கிறார்.

அவர் காலனையே வென்ற தேவதேவர், எல்லா வேதங்களின் ஸாரமாக உள்ளவர். ஒரே பில்வதளத்தை அளிப்பதன்மூலம் மனம் கனிந்து வேண்டிய வரன்களையளிப்பவர். திருமுடிகளில் பாதிமதியை அணிந்திருப்பவர். தெளிவான காவேரியின் நீரிலிருந்து வெளிவந்த பெருமைவாய்ந்தவர்.

நாவல் பழத்தின் சாறை சுவைப்பவர். தாமரை போன்ற அழகிய கண்களைக் கொண்டவர். ஐந்து பெரும் தத்துவங்களின் வடிவமாகிய அவர், அத்தத்துவங்களில் ஒன்ருன நீரின் நடுவில் நிலைத்திருப்பவர். இந்திரன் முதலிய தேவர்களால் வணங்கப்படும் திருவடித் தாமரைகளுடன் கூடியவர்.

சிலந்திப் பூச்சியின் நூல்களால் அமைக்கப்பட்ட மண்டபத்தின் கீழ் வீற்றிருப்பவர். யானை அரசன் துதிக்கையால் அபிஷேகம் செய்யப்பட்டவர் ஆசா பாசங்களான கட்டுக்களால் பீடிக்கப்பட்ட ஹரிதாஸனைக் காத்தருளுபவர். எல்லோராலும் வணங்கப்படும் அகில உலக நாயகியுடன் கூடியவர். (இப்படிப்பட்ட ஜம்பு நாதரை நான் இடைவிடாது போற்றுகிறேன்.)

7

## भक्तपरिपालक श्रीमातृभूवेश्वरः

*शङ्कराभरणम्* — *आदि*

श्री मातृभूतं
हृदि चिन्तयेहम् [श्री]

त्रिशिरगिरिवास - त्रिपुरसंहारं
त्रिगुणात्मिकातीतं - त्रिभुवनरक्षकम् [श्री]

अद्भुतलिङ्गाकार - आदिमध्यान्तरहितं
विभूतिसुन्दरसर्व - विभूषितगात्रम्
पञ्चाक्षराकार - पञ्जरवासिनं
सञ्चितपाप - विनाशकरं देवम् [श्री]

वणिजकुलोद्भव - वनिताप्रसवकाले
जननपरिचरणाय - जननीरूपधृतम्
कैलासाचलोद्धार - लङ्केशमदनिग्रहं
घोषितसामवेद - सन्तुष्टहृदयम् [श्री]

[मध्यमकालः]

व्याघ्राम्बरवर - विलसितगात्रं
जटामकुटधर - शोभितचन्द्रम्
शम्भुमनोहर - मन्मथरूपं
चरणसंगत - हरिदाससमर्चितम् [श्री]

# 7

## அருள் பாலிக்கும் அம்மையப்பன்

சங்கராபரணம் ஆதி

ஸ்ரீ மாத்ரு பூதம்
ஹ்ருதி சிந்த யேஹம் (ஸ்ரீ)

த்ரிசிரகிரிவாஸ த்ரிபுரஸம் ஹாரம்
த்ரிகுணாத்மிகாதீதம் த்ரிபுவன ரக்ஷகம் (ஸ்ரீ)

அத்புதலிங்காகார ஆதிமத்யாந்த ரஹிதம்
விபூதிஸுந்தரஸர்வ விபூஷிதகாத்ரம்
பஞ்சாக்ஷராகார பஞ்ஜரவாஸினம்
ஸஞ்சிதபாப விநாசகரம் தேவம் (ஸ்ரீ)

வணிஜகுலோத்பவ வனிதாப்ரஸவ காலே
ஜனனபரிசரண்ய ஜனனீரூபத்ருதம்
கைலாஸா சலோத்தார லங்கேச மதநிக்ரஹம்
கோஷித ஸாமவேத ஸந்துஷ்ட ஹ்ருதயம் (ஸ்ரீ)

### (மத்யம காலம்)

வ்யாக்ராம்பரவர விலஸித காத்ரம்
ஜடாமகுடதர சோபிதசந்திரம்
சம்பு மனோஹர மன்மதரூபம்
சரணஸங்கத ஹரிதாஸஸமர்ச்சிதம் (ஸ்ரீ)

ஸ்ரீமாத்ருபூதே ச்வரரை (அம்மையப்பனை) மனதால் தியானிக்கிறேன்.

அவர் திரிசிர மலைமீது வசிப்பவர். திரிபுரனை ஒழித்தவர். முக்குணங்களையும் கடந்தவர். முவ்வுலகையும் காப்பாற்றுபவர்.

அடி, நடு, முடி காணமுடியாத அதிசயிக்கத்தக்க லிங்க வடிவம் கொண்டவர். உடல் முழுவதும் திருநீரணிந்து அழகு நிரம்பப் பெற்றவர். பஞ்சாக்ஷரம் என்னும் ஐந்தெழுத்து மந்திரமாகிய கூண்டில் இருப்பவர். பல பிறவிகளிலும் சேர்ந்துள்ள மக்களின் பாபங்களைப் போக்கடிக்க வல்லவர்.

வைச்ய குலத்தைச்சேர்ந்த பெண்ணின் பிரசவகாலத்தில் அவளுக்கு மருத்துவம் செய்ய தாயாக உருவெடுத்து வந்தவர். கைலாஸத்தை

தன்கைகளால் அசைக்க முற்பட்ட இராவணனின் கர்வத்தை அடக்கியவர். பின்னர் அதே இராவணனால் ஸாமவேதம் கானம் செய்யப்பட்ட பொழுது உள்ளம் பூரிப்படைந்தவர்.

புலித்தோல் போற்றிய உருவத்துடன் விளங்குபவர். ஒளிவீசும் சந்திரனை முடியில் அணிந்திருப்பவர். மனதைக் கவரும் வசீகரமான தோற்றமுடையவர். அவரது பாதகமலங்களை சரணடைந்த ஹரிதாஸனால் அர்ச்சிக்கப்படுபவர்.

8

## चञ्चलनिवारक श्रीपञ्चमहादेवी

मुखारी — मिश्रम्

पालय माँ श्री - पञ्चमहादेवि
पुत्रोऽहं किल तव अखिलजगज्जननि [पा]

बालकमितिमत्वा - ममदोषाननाधृत्य
तावक पदं देहि दीनदयावति [पा]

संसार कूपेस्मिन् पतितोऽहं पाताळे
चाञ्चल्यधिया ऽनेकं दुष्कृतं कृतं मया
अपराधसहस्राणि अहर्निशं चरितानि
क्षन्तव्यानीति याचे वात्सल्यगुणपूर्णे [पा]

पुरारिकोपाग्नि - सदंग्धमदनोऽपि
कारुण्यलेशेन - सञ्जीवितस्त्वया
मूकोऽपिवाचालो जातवानिति ख्यातं
हरिदासमात्रे ऽपि विलम्बनं किमुचितम् ? [पा]

8

## சஞ்சலம் தீர்த்திடும் ஸ்ரீ பஞ்சமஹாதேவி

முகாரி — மிச்ரம்

பாலய மாம் ஸ்ரீ பஞ்ச மஹாதேவி
புத்ரோஹம் கில தவ அகிலஜகஜ்ஜனனி? (பா)

பாலகமிதி மத்வா மமதோஷானனுத்ருத்ய
தாவக பதம் தேஹி தீனதயாவதி (பா)

ஸம்ஸார கூபேஸ்மின் பதிதோஹம் பாதாளே
சாஞ்சல்ய தியாநேகம் துஷ்க்ருதம் க்ருதம் மயா
அபராத ஸஹஸ்ராணி அஹர்நிசம் சரிதானி
க்ஷந்தவ்யானீ தியாசே வாத்ஸல்ய குணபூர்ணே (பா)

புராரிகோபாக்னி ஸந்தக்த மதனோபி
காருண்யலேசேன ஸஞ்ஜீவிதஸ்த்வயா
மூகோபி வாசாலோ ஜாதவானிதி க்யாதம்
ஹரிதாஸ மாத்ரேபி விளம்பனம் கிமுசிதம்? (பா)

ஸ்ரீபஞ்ச மஹாதேவியே! அகில உலகத்திற்கும் அன்னையானவளே! நான் உனது புதல்வன் அல்லவா? என்னைக் காப்பாற்றுவாயாக.

எளியோர்களிடம் கருணைகாட்டும் தேவியே! என்னை ஒன்றும் அறியாத பாலகனைக் கருதி என்னிடமுள்ள குற்றம் குறைகளைப் பொருட்படுத்தாது உனது மேலான இருப்பிடத்தில் ஏற்றுக்கொள்ளுவாயாக.

உலக வாழ்க்கை என்னும் பெரிய கிணற்றில் அடிபாதாளம் வரை அமிழ்ந்து தத்தளிக்கிறேன். புத்தி தடுமாற்றத்தின் காரணமாய் பலவிதமான செய்யக்கூடாத தீய செயல்கள் என்னால் புரியப்பட்டுள்ளன. இரவு, பகல் எந்நேரமும் இடைவிடாமல் என்னால் செய்யப்பட்ட ஆயிரக்கணக்கான குற்றங்கள் உன்னால் பொருத்தருளப்பட வேண்டும். ஏ அன்பே வடிவான அன்னையே!

பரமேச்வரனின் கோபக்கனலால் வெளிவந்த அக்னியால் சாம்பலாக் கப்பட்ட மன்மதனும் உன்னுடைய கடுகளவு கருணைப்பார்வையால் உயிர்ப்பிக்கப் படவில்லையா? பிறவியில் ஊமையாக இருந்தும் பின் உன் கருணையால் மேலான வாக்குத்திறன் பெற்றது உலகில் யாவராலும் நன்கு புகழப்பட்டுள்ளது. அப்படியிருக்க இந்த ஹரிதாஸனைப் பொருத்த மட்டில் தாமதம் செய்வது தகுதியுள்ளதாகுமோ தாயே?

9

# सकलकलावल्ली श्रीअखिलाण्डेश्वरी

*सावेरी* *मिश्रम्*

माँ पाहि अखिलाण्डेश्वरि
महिषासुर - मर्दिनि [माँ]

जम्बूपतिप्रिय - सहधर्म चारिणि
भक्तानुग्रहकर - शक्तिस्वरूपिणि [माँ]

पञ्चदशाक्षर - पञ्जरवासिनि
सञ्चितपाप - समूलविनाशिनि
पण्डितपूजित - परमकृपाकरि
वाञ्चितमङ्गळ - भाग्यप्रदायिनि [माँ]

चन्द्रोदयारम्भ - मिवानन्दवर्षिणि
शंकर समर्पित - ताटङ्कभूषणि
वीणावादन - नादविनोदिनि
विमलहरिदास - हृदयविहारिणि [माँ]

9

## (ஸகலகலாவல்லி அகிலாண்டநாயகி)

ஸாவேரீ மிச்ரம்

*மாம் பாஹி அகிலாண்டேச்வரி*
*மஹிஷாஸுர மர்த்தினி* (மா)

*ஜம்பூபதிப்ரிய ஸஹதர்மசாரிணி*
*பக்தாநுக்ரஹகர சக்திஸ்வரூபிணி* (மா)

*பஞ்சதசாக்ஷர பஞ்ஜரவாஸினி*
*ஸஞ்சித பாப ஸமூல விநாசினி*
*பண்டித பூஜித பரமக்ருபாகரி*
*வாஞ்சிதமங்கள பாக்ய ப்ரதாயினி* (மா)

*சந்த்ரோதயாரம்ப மிவானந்த வர்ஷிணி*
*சங்கர ஸமர்ப்பித தாடங்க பூஷணி*
*வீணாவாதன நாதவினோதினி*
*விமலஹரிதாஸ ஹ்ருதய விஹாரிணி* (மா)

*மகிஷாஸுரனை வென்ற ஸ்ரீஅகிலாண்ட நாயகியே! என்னைக் காத்தருள்வாயாக.*

*ஜம்பு நாதரின் மனப்படி அவருடன் கூடி தர்மத்தைப் பின்பற்றி நடப்பவளே. பக்தர்களுக்கருள்புரிந்து அவர்கள் விருப்பங்களை நிறைவேற்றிவைக்க வல்ல ஆதிபராசக்தியே*

*பதினைந்து பீஜாக்ஷராங்களால் அமைக்கப்பட்ட கூண்டில் வசிப்பவளே! முன் ஜன்மங்களில் மாந்தர்கள் செய்துள்ள பாபங்கள் அனைத்தையும் வேருடன் களைந்தெறியவல்ல தாயே. மேலான பண்டிதர்களால் வழிபடப்பட்டு உள்ளத்தில் கருணை நிரம்பப் பெற்றவளே. மக்கள் விரும்பும் எல்லா பாக்யங்களையும் அளிப்பவளே.*

*உதயமாகும் நிலாவின் ஒளி போன்று ஆனந்தத்தை பொழிந்து கொண்டிருப்பவளே. ஸ்ரீஆதிசங்கரரால் அர்ப்பணிக்கப்பட்ட தாடங்கத்தை பூண்டிருப்பவளே. வீணையை மீட்டி அதிலிருந்து வெளிவரும் நாதப்பெருக்கில் மனம் களிப்பவளே. ஹரிதாஸனின் தெளிந்த உள்ளங்களில் மகிழ்ச்சியுடன் விளையாடுபவளே (என்னைக் காத்தருள்வாயாக)*

**10**

## करुणापूर्णश्रीकामकोटि कामाक्षी

*मायामाळवगौळै या श्री* *आदि या मिश्रम्*

**कटाक्षितो Sस्मि श्री कामाक्ष्या**
**श्रीकामकोटि - निवासिन्या** **[क]**

**अष्टादश - विद्यास्थान**
**ज्ञानानन्द - प्रदायिन्या** **[क]**

**आपाताळ - सत्यलोकान्त**
**चतुर्दशभुवन - चराचरजनन्या**
**आश्रितरक्षण - कृपारसपूर्णया**
**शाश्वतशिवपदा - नुग्रहकरिण्या** **[क]**

एकाम्रेश्वर - मनोल्लासक
लावण्यामृतमय - सर्वाङ्गशोभिन्या
सुरसुन्दरीनुत - पादसरोजिन्या
पालितहरिदास - परमदेवतया [क]

## 10

## ஸ்ரீகாமகோடிச்வரீ காமாக்ஷி

மாயாமாளவகௌளை,ஸ்ரீ ஆதி, மிச்ரம்

*கடாக்ஷிதோஸ்மி ஸ்ரீகாமாக்ஷ்யா*
*ஸ்ரீகாமகோடி நிவாஸின்யா (க)*

*அஷ்டாதச வித்யாஸ்தான*
*ஞானானந்த ப்ரதாயின்யா (க)*

*ஆபாதாள ஸத்யலோகாந்த*
*சதுர்தச புவன சராசரஜனன்யா*
*ஆச்ரித ரக்ஷண க்ருபாரஸபூர்ணயா*
*சாச்வத சிவபதாநுக்ரஹ காரிண்யா (க)*

*ஏகாம்ரேச்வர மனோல்லாஸக*
*லாவண்யாம்ருதமய ஸர்வாங்க சோபின்யா*
*ஸுரஸுந்தரீ நுத பாதஸரோஜின்யா*
*பாலித ஹரிதாஸ பரமதேவதயா (க)*

ஸ்ரீகாமகோடி பீடத்தில் விளங்கிடும் ஸ்ரீகாமாக்ஷி தேவியால் அருள் பாலிக்கப்பட்டுள்ளேன்.

பதினெட்டு வித வித்யையிலும் மனம் களிப்பவளும் ஞானம் என்னும் ஆனந்தத்தை வாரி வழங்கும் ஸ்ரீகாமாக்ஷி தேவியால் அருள்பாலிக்கப் பட்டுள்ளேன்.

பாதாள லோகம் முதல் ஸத்யலோகம் வரையிலுமுள்ள பதிநான்கு புவனங்களிலும் உள்ள அசைவன, அசைவற்றன போன்ற எல்லாப் பொருள்களுக்கும் தாயாய் உள்ளவளும், தன்னையண்டியவர்களைக் காத்தருள்வதில் கருணையுள்ளம் நிரம்பப்பெற்றவளும், நிலையான

சிவலோகப் பதவியை அளிக்கவல்ல ஸ்ரீகாமாக்ஷியால் அருள்பாலிக்கப் பட்டுள்ளேன்.

எல்லாவிதமான பாக்யங்களையும் வாரி வழங்குபவளும் அமிர்தமயமான அங்கஅவயவ அழகால் சிறந்து பிரகாசிப்பவளும் ஏகாம்ரேச்வரரின் மனதிற்கு களிப்பூட்டுபவளும், தேவலோகத்து அழகிய மாதர்களால் வணங்கப்பட்ட திருவடிகளைக் கொண்டவளும். ஹரிதாஸனைக் காப்பாற்றும் மேலான பரதேவதையுமான ஸ்ரீகாமாக்ஷி தேவியால் அருள்பாலிக்கப்பட்டுள்ளேன்.

## 11

## अखिलजगन्नायक श्रीएकाम्रेश्वरः

*हरिकाम्बोदी* | *आदि*

एकाम्रेश्वरं अखिललोकेश्वरं
चन्द्रमौळीश्वरं चिन्तय सन्ततम् [ए]

सकलवेदात्मक - सत्यस्वरूपं
शान्तमहार्णव - ज्ञान रसामृतम् [ए]

सनकसनन्दक - वन्दितपदयुगं
शंकरजगद्गुरु-सेवितवैभवं
कामकोटीश्वरी - श्रीकामाक्षी
करकमलार्चित - सुन्दरवपुषम् [ए]

अष्टदळोपरि - वेष्टितलिङ्गं
सृष्टिस्थितिलय - हेतुविहारम्
श्रीकाञ्चीपुरी - नित्यनिवासकं
पालितहरिदास - परमकृपाकरम् [ए]

## 11

## அகில உலகநாயகர் ஏகாம்ரேச்வரர்

ஹரிகாம்போதி | ஆதி

*ஏகாம்ரேச்வரம் அகிலலோகேச்வரம்*
*சந்திரமௌளீச்வரம் சிந்தய ஸந்ததம்* (ஏ)

ஸகலவேதாத்மக ஸத்யஸ்வரூபம்
    சாந்த மஹார்ணவ ஞானரஸாம்ருதம் (ஏ)

ஸனக ஸநந்தக வந்தித பதயுகம்
    சங்கர ஜகத்குரு ஸேவித வைபவம்
காமகோடிச்வரி ஸ்ரீகாமாக்ஷி
    கரகமலார்ச்சித ஸுந்தர வபுஷம் (ஏ)

அஷ்டதளோபரி வேஷ்டிதலிங்கம்
    ஸ்ருஷ்டி ஸ்திதிலய ஹேது விஹாரம்
ஸ்ரீகாஞ்சிபுரீ நித்ய நிவாஸகம்
    பாலித ஹரிதாஸ பரமக்ருபாகரம் (ஏ)

அகில உலக நாயகனுக உள்ளவரும் மதியைமுடி மேல் தாங்குபவருமான ஸ்ரீஏகாம்ரேச்வரரைக் கருத்தில் கொள்வீராக.

அவர் எல்லா வேதங்களின் உட்பொருளாக விளங்கும் ஸத்யத்தின் வடிவானவர். சாந்தம் என்னும் பெருங்கடலில் தோன்றிய ஞானம் என்னும் அமிர்தம் போன்றவர்.

ஸனகர், ஸநந்தகர் போன்ற மகான்களால் வணங்கப்பட்டவர். ஜகத்குரு ஸ்ரீசங்கரரால் வழிபடப்பட்ட பெருமையுள்ளவர். ஸ்ரீகாமகோடி பீடத்தில் விளங்கும் ஸ்ரீகாமாக்ஷி தேவியின் தாமரை போன்ற மென்கரங்களால் அர்ச்சனை செய்யப்பட்ட அழகிய உருவம் கொண்டவர்.

எட்டு தளவரிசைகளுக்கு மேல் லிங்க வடிவத்துடன் நின்று உலகத்தின் தோற்றுவாய், நிலைத்திருப்பது, ஒடுங்குவது என்ற மாறுபாடுகளுக்கு காரணமாக உள்ளவர். ஸ்ரீகாஞ்சீ நகரத்தில் நிலைத்திருந்து ஹரிதாஸனைக் காத்தருளும் மேலான கருணையுள்ளம் படைத்தவர் (இப்படிப்பட்ட ஸ்ரீஏகாம் ரேச்வரரை இடைவிடாது கருத்தில் கொள்வீராக)

## 12

# राजमातङ्गी श्रीमीनाक्षी

काम्बोदी | मिश्रम्

**मधुरापुरी - नायिके**
    **माँ पाहि मीनाम्बिके** [प]

माधव-प्रिय - सोदरि
श्री-महा त्रिपुरसुन्दरि [म]

सुन्दरेश्वर - चित्तविलासिनि
सत्यज्ञाना - नन्दशरीरिणि
श्रीचक्राङ्कित - पीटनिवसिनि
सकलजगन्मूल - शक्तिस्वरूपिणि [म]

कनकपङ्कज - तटाकतीरे
कान्तारसहित - विहाररसिके
पाण्ड्यराजेन्द्र - भाग्यमनोन्मणि
पालित हरिदास - परमकल्याणि [म]

## 12

## ராஜ மாதங்கீ ஸ்ரீ மீனாக்ஷீ

காம்போதி — மிச்ரம்

*மதுரா புரீ நாயிகே*
*மாம் பாஹி மீனாம்பிகே (ம)*

*மாதவ ப்ரிய ஸோதரி*
*ஸ்ரீ மஹாத்ரிபுர ஸுந்தரி (ம)*

*ஸுந்தரேச்வர சித்தவிலாஸினி*
*ஸத்யஞானா நந்தசரீரிணி*
*ஸ்ரீசக்ராங்கித பீடநிவாஸினி*
*ஸகலஜகன்மூல சக்திஸ்வரூபிணி (ம)*

*கனகபங்கஜ தடாகதீரே*
*காந்தாரஸஹித விஹார ரஸிகே*
*பாண்டிய ராஜேந்திர பாக்யமனோன்மணி*
*பாலித ஹரிதாஸ பரமகல்யாணி (ம)*

*மதுரை மாநகரின் தலைவியாய் விளங்கும் ஏ மீனாக்ஷித்தாயே! என்னைக் காத்தருள்வாயாக.*

*மாதவனின் அன்பிற்கு பாத்திரமான உடன்பிறந்தவளாய், ஸ்ரீமகா த்ரிபுரஸுந்தரி என்னும் பெருமை வாய்ந்தவளே!*

ஸ்ரீ ஸுந்தரேச்வரரின் மனதிற்கு இன்பமூட்டும் மெய்ஞான வடிவம் கொண்டுள்ளவளே. ஸ்ரீசக்ரம் என்னும் பீடத்தில் அமர்ந்து எல்லா உலகிற்கும் ஆதாரமாய் விளங்கும் ஆதிபராசக்தியே.

பொற்றாமரைப் பொய்கையின் கரையின்மீது தன் நாயகனுடன் திருவிளையாடல்கள் புரிந்து களிப்புற்றிருப்பவளே. பாண்டிய மன்னனை மலயத்வஜனின் பெரும் பாக்யமாக உதித்தவளே. இந்த ஹரிதாஸனைக் காத்தருளும் பரமகல்யாணியே.

13

## मनदस्मितपूर्णश्रीमीनलोचना

*पूर्विकल्याणी* | *आदि*

मीनाक्षि मुदं देहि शरणागतं
माँ पाहि सन्ततं निराश्रयम् [मी]

नानाचराचर - जगदेकनिलये
नवनवरसपूर्ण-गुणोज्वले [मी]

हालास्यनाथस्य - वरकामिनि
हेरम्भगुरुगुह - प्रियकारिणि
नगराजकुलकीर्ति - संवर्धिनि
नाकादिसन्नुत - प्रणतार्तिभञ्जिनि [मी]

मन्दस्मितेनैव चन्द्रानने
ज्योत्स्नावितानेन पुळकाङ्कितम्
करुणाप्रवाहेण संप्लावितं
हरिदासं तारय श्रीचक्रवासिनि [मी]

13

## இளநகை தவழ்ந்திடும் அங்கயற்கண்ணி

பூர்விகல்யாணி | ஆதி

*மீனாக்ஷி முதம்தேஹி சரணாகதம்*
*மாம் பாஹி ஸந்ததம் நிராச்ரயம்* *(மீ)*

நாநாசராசர ஜகதேக நிலயே
நவநவ ரஸபூர்ண குணோஜ்வலே (மீ)

ஹாலாஸ்ய நாதஸ்ய வரகாமினி
ஹேரம்பகுருகுஹ ப்ரியகாரிணி
நகராஜகுலகீர்த்தி ஸம்வர்த்தினி
நாகாதி ஸன்னுத ப்ரணதார்த்தி பஞ்ஜினி (மீ)

மந்தஸ்மிதேனைவ சந்த்ரானனே
ஜ்யோத்ஸ்ரு விதானேன புளகாங்கிதம்
கருணாப்ரவாஹேண ஸம்ப்லாவிதம்
ஹரிதாஸம் தாரய ஸ்ரீசக்ரவாஸினி (மீ)

ஏ மீனாக்ஷி தேவியே! உன்பாதத்தைப் பற்றிய எனக்கு பூர்ண ஆனந்த நிலையை அருள்வாயாக. வேறு எந்த ஆதரவுமற்ற என்னைக் காத்தருள்வாயாக.

அசையும் பொருள்கள், அசைவற்றவை அடங்கிய இந்த ப்ரபஞ்சத்திற்கு ஆதாரமாயிருப்பவளே! புதிது புதிதான சுவை, நிறம், குணங்களின் சேர்க்கையால் ஒளியுடன் விளங்குபவளே.

ஆலவாயழகனின் மனதிற்க்கிசைந்தவளே. யானை முகம் படைத்த விநயகர், குருகுஹனை முருகன் முதலியவர்கள் உள்ளம். களிக்கச் செய்பவளே. மலையரசன் குலத்தின் புகழை மேலோங்கச் செய்தவளே! தேவர்கள் முதலியவர்களால் துதிக்கப்பட்டு தன்னை வணங்குபவர்களின் துயரங்களை அகற்றுபவளே!

சந்திரன் போன்ற முகம் படைத்தவளே! உன்னுடைய மென்மையான இள நகையின் நிலாவொளியால் மயிற்கூச்சலுக்குள்ளாகியுள்ளேன். உன்னிடமிருந்து பெருக்கெடுத்துவரும் கருணை வெள்ளத்தால் நனைக்கப்பட்டுள்ளேன். இந்த ஹரிதாஸனைக் கைதூக்கி விடுவாயாக. ஸ்ரீசக்ரத்தின் நடுவில் விளங்கும் தாயே.

14

## सकलसौभाग्यदायिनी श्री पर्वतवर्धनी

रोञ्जुरुट्टी आदि

**पर्वतवर्धनि पापविनाशिनि**
**भाग्यप्रदायिनि पालय माँ अम्ब** [प]

सर्वसमुद्भव - वर्धनकारिणि
सकलजीवात्मक - साक्षिस्वरूपिणि [प]

सेतु महार्णव - द्वीपनिवासिनि
आदिपराशक्ति आनन्ददायिनि
सीतानायक - पूजित पावनि
वेदवेदान्त - तत्वप्रकाशिनि [प]

कनकविभूषण - कान्ति विनोदिनि
दिनकरकोटि - प्रकाशविलासिनि
चन्द्रकलाधर - शंकरमोहिनि
प्रमुदितहरिदास - वाङ्मयवर्षिणि [प]

## 14

## பாக்யங்களருளும் பர்வதவர்த்தினி

செஞ்சுருட்டி ஆதி

*பர்வத வர்த்தனி பாபவிஞசினி*
*பாக்யப்ரதாயினி பாலய மாமம்ப* *(ப)*

*ஸர்வஸமுத்பவ வர்த்தன காரிணி*
*ஸகல ஜீவாத்மக ஸாக்ஷிஸ்வரூபிணி* *(ப)*

*ஸேது மஹார்ணவ த்வீப நிவாஸினி*
*ஆதி பராசக்தி ஆனந்ததாயினி*
*ஸீதாநாயக பூஜித பாவனி*
*வேதவேதாந்த தத்வப்ரகாசினி* *(ப)*

*கனகவிபூஷண காந்திவினோதினி*
*தினகரகோடி ப்ரகாசவிலாஸினி*
*சந்த்ரகலாதர சங்கர மோஹினி*
*ப்ரமுதித ஹரிதாஸ வாங்மய வர்ஷிணி* *(ப)*

*பாபங்களைப் போக்கடிக்க வல்ல பர்வத வர்தினித் தாயே! எல்லா ஸௌபாக்யங்களையும் வளர்ப்பவளே! என்னைக் காத்தருள்வாயாக.*

*உலகில் உள்ள எல்லாப்பொருள்களின் தோற்றுவாய், வளர்ச்சி முதலியவைகளுக்குக் காரணமாகவும், எல்லா உயிர்களுக்கு ஜீவநாடியாகவும், எல்லா செய்கைகளுக்கும் ஒரே ஸாக்ஷியாகவும் உள்ளவளே!*

*ஸேது ஸமுத்ரத்தின் தீவில் (இராமேச்வரத்தில்) குடிகொண்டிருப்பவளே! ஆதிபராசக்தியே! மேலான ஆனந்தத்தை அளிப்பவளே! ஸீதையின் பிரிய நாயகனை ஸ்ரீராகவனால் வணங்கப்பட்ட பரிசுத்தமான அன்னையே! வேதம் வேதாந்தம் முதலியவற்றின் உட்பொருளை தெளிவுபடுத்தும் ஒளிமயமானவளே!*

*தங்க ஆபரணங்களின் காந்தியால் அபூர்வமான தோற்றத்துடன் கூடி கோடிக்கணக்கான சூரியர்களின் ஒளியுடன் பிரகாசிப்பவளே! சந்திரனை முடிமேல் தாங்கிடும் சங்கரனை மயக்கமுறச்செய்தவளே! மகிழ்ச்சியூட்டப்பட்ட ஹரிதாஸனின் வாக்கிலிருந்து அமிர்தமயமான சொற்களைப் பொழிந்து கொண்டிருப்பவளே (என்னைக் காப்பாற்றுவாயாக.)*

## 15

## आनन्दताण्डवलोल सभापतिः

*कमास्* — *आदि*

आनन्दताण्डव नटेशं - भजे सदा
चित्सभेशं - चिदंबरेशं - स्वयंप्रकाशम् [आ]

सनक महामुनि - सन्नुतचरणं
कनकविभूषित - मङ्गळगात्रम [आ]

पुरहर करद्दत - डमरुक शूल
नूपुरनादित - किङ्किणिजालम्
मद्धळ घोषित - लयविन्यासं
तद्दिमिधिमिधिमि - नर्तनलोलम् [आ]

शिवकामेश्वरी - चित्तविलासकं
षण्मुखवाहन - मयूरनर्तकम्
प्रमथविनोदित - गजमुखलास्यं
पालित हरिदास - मानसरञ्जकम् [आ]

15

# ஆனந்தக்கூத்தாடும் அம்பலவாணன்

கமாஸ் ஆதி

ஆனந்த தாண்டவ நடேசம் - பஜே ஸதா (ஆ)
சித்ஸபேசம் - சிதம்பரேசம் - ஸ்வயம் பிரகாசம் (ஆ)

ஸனக மஹாமுனி ஸன்னுத சரணம்
கனகவிபூஷித மங்கள காத்ரம் (ஆ)

புரஹர கரத்ருத டமருக சூலம்
நூபுர நாதித கிங்கிணிஜாலம்
மத்தளகோஷித லயவிந்யாஸம்
தத்திமிதிமிதிமி நர்த்தன லோலம் (ஆ)

சிவகாமேச்வரி சித்த விகாஸகம்
ஷண்முகவாஹன மயூரநர்த்தகம்
ப்ரமத வினோதித கஜமுகலாஸ்யம்
பாலிதஹரிதாஸ மானஸரஞ்ஜகம் (ஆ)

ஆனந்தக் கூத்தாடும் அம்பலவாணனை நடராஜப் பெருமானை எப்பொழுதும் வழிபடுகிறேன். சிதாகாசம், வெளியாகாசம் இவ்விரண்டிலும் தன்னிகரில்லா பெரும் ஜோதி வடிவமானவனை இடைவிடாது வழிபடுகிறேன்.

அப்பெருமான் ஸனக முனிவரால் வணங்கப்பட்ட திருவடிப் பெருமையுடையவன். தங்கமயமான ஆபரணங்களிந்து மேலான மங்கள மயமான தேகம் கொண்டவர்.

திரிபுரத்தைவென்றவரான அவர், கைகளில் டமருகம் சூலாயுதம் முதலியவற்றை தாங்கி பாதங்களில் சிலம்பங்கள் 'கலீர்' 'கலீர்' என்று ஒலித்திட மத்தள வாத்யத்தின் தாளக்கட்டுடன் "தத்திமி" 'திமிதிமி' என்று ஆனந்த நடனம் புரிந்துகளிப்பவர்.

சிவகாமசுந்தரியின் மனதிற்கிசைந்தவர். தன் ஆனத்தக் கூத்தினால் முருகனின் வாகனமாகிய மயிலையும் ஆடச்செய்து ப்ரமத கணங்கள் கண்டதியயிக்கும்படி யானைமுகம் கொண்ட கணநாதனையும் தாண்டவ மாடச்செய்தவர். தன்னால் காப்பாற்றப்பட்ட ஹரிதாஸனின் மனதை மகிழ்ச்சியிலாழ்த்துபவர் (இப்படிப்பட்ட ஆனந்தக் கூத்தாடும் அம்பல வாணனை எப்பொழுதும்வழிபடுகிறேன்.)

# 16

# परमकृपाकर श्री जानकीरमणः

असावेरी आदि

पालय माँ श्री - जानकी रमण
परमकृपाकर - पङ्कजनयन [पा]

काळमेधशरीर - कान्तिमय राम
पल्लवमृदुतर - कोमळवदन [पा]

नारद तुम्बुरु - कृतस्तुतिपात्र
मुनिगणश्लाघित - पुण्यचरित्र
रावणमर्दन - रणजयधीर
पापविनाशक - तारकनाम [पा]

राज्याभिषेकञ्च - वनवासशासनं
सममिव स्वीकृत - सुस्मितवदन
सद्गुरु श्रीत्याग - राजसुपूजित
विमलहरिदास - वान्दितचरण [पा]

# 16

# பரம தயாளன் ஸ்ரீ ஜானகீரமணன்

அஸாவேரி ஆதி

*பாலய மாம் ஸ்ரீ ஜானகிரமண*
*பரமக்ருபாகர பங்கஜ நயன* (பா)
*காளமேகசரீர காந்திமயராம*
*பல்லவ ம்ருதுதர கோமளவதன* (பா)

*நாரத தும்புரு க்ருதஸ்துதி பாத்ர*
*முனிகணச்லாகித புண்ய சரித்ர*
*ராவணமர்த்தன ரணஜயதீர*
*பாபவினாசக தாரக நாம* (பா)

*ராஜ்யாபிஷேகம் ச வனவாஸ சாஸனம்*
*ஸமமிவ ஸ்வீக்ருத ஸுஸ்மிதவதனு*
*ஸத்குரு ஸ்ரீ தியாக ராஜஸுபூஜித*
*விமல ஹரிதாஸ வந்தித சரணு* (பா)

*ஸ்ரீஜானகியின் மணாளனே! மேலான கருணையுள்ளம் படைத்தவனே! தாமரைக்கண்ணா! என்னைக் காத்தருள்வாயாக.*

*கார்மேகம் போன்ற காந்தியுடன்கூடிய சரீரம் படைத்தவனே! மலர்களைக் காட்டிலும் மென்மையான முகம் கொண்டவனே!*

*நாரதர், தும்புரு முதலியவர்களால் செய்யப்பட்ட துதிகளுக்கு ஏற்றவனே. மாமுனிவர்களும் புகழக்கூடிய புண்யமான நடத்தையுடன் கூடியவனே. இராவணனைப் போரில் கொன்று வீரர்களுக்கெல்லாம் முதன்மையாக விளங்குபவனே. பாபங்களைப் போக்கடித்து ஸம்ஸாரமாகிய உலகவாழ்க்கையை கடக்கச் செய்யவல்ல மந்திரத்தை பெயரில் கொண்டவனே.*

*முடிசூட்டிக் கொள்ளும் படியும் கானனமேகும் படியும் இடப்பட்ட இரு ஆணைகளையும் ஒன்றுபோல் ஏற்றுக்கொண்டு இனிய புன்முறுவல் பூத்த முகத்துடன் காட்சியளித்தவனே. ஸத்குரு ஸ்ரீதியாகராஜ ஸ்வாமிகளால் நன்கு ஆராதிக்கப்பட்டு தூய்மையான உள்ளம் கொண்ட ஹரிதாஸர்களால் வணங்கப்படும் திருவடிகளுடையவனே (என்னைக் காப்பாற்றுவாயாக)*

## 17

# कलियुगवरद श्रीगुरुवातपुरीशः

*आभोगी* *आदि*

बालकृष्णं भावयेऽहं
गुरुवातपुरवासिनम् [बा]

नीलाम्बरावृत - श्यामळगात्रं
नलिनविलोचन - स्मेरवदनम् [बा]

दधिनवनीतचोर - निरन्तरनिरतं
नवनव रसभर खेलनचतुरम्
कालियाविषधर - प्रतिफणताण्डव
अद्भुतलीला - नटनविनोदम् [बा]

वरतरुणीमन - मोहन विग्रहं
करद्दतमुरळी - गान विलोलम्
वाञ्चितफलप्रद- कलियुगवरदं
भवभयपीडित - हरिदास संन्तारकम्  [बा]

## 17

## கலியுகவரதனான ஸ்ரீகுருவாயூரப்பன்

ஆபோகி  ஆதி

*பாலகிருஷ்ணம் பாவயேஹம்*
*குருவாதபுர வாஸினம்*  *(பா)*

*நீலாம்பராவ்ருத ச்யாமளகாத்ரம்*
*நளினவிலோசன ஸ்மேரவதனம்*  *(பா)*

*ததிநவநீதசோர நிரந்தர நிரதம்*
*நவநவரஸபர கேலனசதுரம்*
*காளிய விஷதர ப்ரதிபண தாண்டவ*
*அத்புதலீலா நடனவினோதம்*  *(பா)*

*வரதருணிமன மோஹனவிக்ரஹம்*
*கரத்ருதமுரளீ கானவிலோலம்*
*வாஞ்சித பலப்ரத கலியுக வரதம்*
*பவபயபீடித ஹரிதாஸ ஸந்தாரகம்*  *(பா)*

*குருவாயூரில் குடிகொண்டுள்ள குழந்தை வடிவான கண்ணனை நான் போற்றுகிறேன்.*

*நீலமயமான பட்டாடை கருமேனியைத்தழுவ தாமரை போன்ற கண்களுடனும் புன்முறுவல் பூத்த திருமுகத்துடன் காட்சியளிக்கும் குழந்தைக் கண்ணனை நான் போற்றுகிறேன்.*

*தயிர், வெண்ணை முதலியவற்றை திருடுவதில் எப்பொழுதும் நாட்டம் கொண்டுள்ள அவன் புதுமை புதுமையான வேடிக்கை விளையாட்டுகளில் வல்லவன். விஷம் நிறம்பப்பெற்ற காளியனுடைய ஒவ்வொரு படமெடுத்த தலையிலும் அதிசய தாண்டவமாடி களிப்படைந்தவன்.*

மேலான இளம் பெண்டிர்களின் மனங்களைக் கவரும் அழகிய உருவம் கொண்டவன். கையில் தாங்கிய குழலினுடைய இசையின்பத்தில் ஈடுபட்டவன். இக்கலிகாலத்திலும் அன்பர்கள் வேண்டும் பலன்களை அளித்து சம்சாரமாகிய பெரும்பயத்திலிருந்து ஹரிதாஸர்களை கைதூக்கிவிட்டு துன்பக்கடலைத் தாண்ட உதவிபுரிபவன் (இப்படிப்பட்ட குருவாயூரில் குடிகொண்ட குழந்தை வடிவத்துடன் கூடிய கண்ணனை நான் போற்றுகிறேன்.)

18

## शरणागतवत्सल श्री शबरिगिरीशः

*सौराष्ट्रम् या आहिरी* — *आदि या मिश्रम्*

शरणं शरणं श्री - शबरिगिरीश
सन्ततं पालय सर्वलोकेश [श]

करुणालयोसि कामितदायक
काञ्चन मणिमय - कमनीयविग्रह [श]

हरिहर लालित - अद्भुतगात्र
अमरवन्दित पद - परमपवित्र
पूर्णपुष्कलालोल - पुण्यचरित्र
भुवनमोहन श्री - धर्मसंरक्षक [श]

पञ्चपर्वतमध्य - कुञ्जरसेवित -
पम्पाप्रवाहतट - काननविहार
मोहिनीवरबाल मुनिगणवन्द्य
पालितहरिदास - कृतस्तुतिपात्र [श]

**18**

## ஸ்ரீ சபரிமலைமீதுள்ள அகிலலோக நாயகன்

ஸௌராஷ்டிரம், ஆகிரி — ஆதி, மிச்ரம்

*சரணம் சரணம் ஸ்ரீ சபரிகிரீச*
*ஸந்ததம் பாலய ஸகலலோகேச* (ச)

*கருணாலயோஸி காமிததாயக*
*காஞ்சன மணிமய கமனீயவிக்ரஹ* (ச)

ஹரிஹரலாலித அத்புதகாத்ர
அமரவந்திதபத பரமபவித்ர
பூர்ண புஷ்கலாலோல புண்யசரித்ர
புவனமோஹன ஸ்ரீ தர்மஸம்ரக்ஷக (ச)

பஞ்சபர்வதமத்ய குஞ்ஜரஸேவித
பம்பாப்ரவாஹ தட கானனவிஹார
மோஹினீவரபால முனிகணலோல
பாலிதஹரிதாஸ க்ருதஸ்துதி பாத்ர (ச)

எல்லா உலகங்களுக்கும் தலைவனாய் விளங்கும் சபரிமலை நாயகனே! உன்னை சரணமடைகிறேன். என்னைக் காத்தருள்வாயாக.

மக்கள் விரும்பிடும் எல்லா வரங்களையும் வழங்கிடும் நீ பெரும் கருணையின் இருப்பிடமல்லவோ? தங்கம், உயர்ந்த இரத்தினங்களாலான அணிகலங்களால் அலங்கரிக்கப்பட்டு கவர்ச்சிகரமான உருவம் கொண்டவனே.

அரி, அரன், இருவராலும் சீராட்டப்பட்ட அத்புதமான மேனியமைப்பு கொண்டவனே. தேவர்களாலும் வணங்கப்படும் தூயவனே. பூர்ணாதேவி புஷ்கலா தேவியர்களை மகிழ்விக்கும் புண்ணியமான நடத்தையுடையவனே. உலகத்தை யெல்லாம் வசீகரம் செய்து தர்மத்தை நன்கு பரிபாலிப்பவனே.

யானைகள் வாழ்ந்திடும் ஐந்து மலைகளுக்கு இடைப்பட்ட பம்பா நதியின் கரையிலமைந்த காட்டில் திருவிளையாடல்கள் புரிபவனே. மோகினிதேவியின் அருமை மைந்தனே. முனிவர்கள் வணக்கத்திற்கிலக்கானவனே. உன்னால் காப்பாற்றப்பட்ட ஹரிதாஸர்களின் துதிகளுக்கு ஏற்றவனே.

## 19

## आनन्दामृतवर्षक श्रीरङ्गराजः

शंकराभरणम् आदि

**श्री रङ्गराजं प्रणतोऽस्मि नित्यं**
**चिदानन्दमोंकार - नादान्तदेवम् [श्री]**

**संगीत साहित्य - सुधारसार्णवं**
**संसारतारक - निरुपमोपायम् [श्री]**

इक्ष्वाकु वंशज - संपूज्यमानं धर्म -
वर्मादि भूपाल - संसेव्यमानम्
हेमापगातीर - विहारलोलं
पद्मालयासक्त - चञ्चलभृङ्गम् [श्री]

राकेन्दु प्रतिमान - वदनारविन्दं भुवन -
संमोहनापाङ्ग - लावण्यसारम्
वेदान्तशास्त्रार्थ - सत्यस्वरूपं
पालितहरिदास - परमात्मतत्वम् [श्री]

## 19

## அமிர்தமயமான ஆனந்தத்தைப் பொழியும் ஸ்ரீரங்கராஜன்

சங்கராபரணம் ஆதி

*ஸ்ரீரங்கராஜம் ப்ரணதோஸ்மி நித்யம்*
*சிதானந்தமோங்கார நாதாந்த தேவம் (ஸ்ரீ)*

*ஸங்கீத ஸாஹித்ய ஸுதார்ஸார்ணவம்*
*ஸம்ஸார தாரக நிருபமோபாயம் (ஸ்ரீ)*

*இஷ்வாகுவம்சஜ ஸம்பூஜ்யமானம் தர்ம-*
*வர்மாதி பூபால ஸம்ஸேவ்யமானம்*
*ஹேமாபகாதீர விஹாரலோலம்*
*பத்மாலயாஸக்த சஞ்சல ப்ருங்கம் (ஸ்ரீ)*

*ராகேந்துப்ரதிமான வதனாரவிந்தம் புவன-*
*ஸம்மோஹனாபாங்க லாவண்யஸாரம்*
*வேதாந்தசாஸ்த்ரார்த்த ஸத்யஸ்வரூபம்*
*பாலிதஹரிதாஸ பரமாத்மதத்வம் (ஸ்ரீ)*

*சிதாகாசத்தில் ஓம்கார நாதவடிவனாய் ஆனந்தத்தைப் பொழிந்து* **கொண்டிருக்கும் தேவனை ஸ்ரீரங்கராஜனை நான் எப்பொழுதும் வணங்குகிறேன்**

அவன் ஸங்கீதம் ஸாஹித்யம் இவ்விரண்டு கலைகளும் ஒன்று கலந்து நிரம்பப் பெற்ற அமிர்தக்கடல் போன்றவன். உலக வாழ்க்கையாகிற கோரமான பெருங்கடலைத்தாண்ட ஈடு இணையில்லாத சாதனமாக உள்ளவன்.

இக்ஷ்வாகு மன்னன் வம்சத்தில் உதித்தவர்களால் நன்கு வழிபடப்பட்டு தர்மவர்மா முதலிய அரசர்களால் வணங்கப்பட்டவன். பொன்னியாற்றின் கரையில் திருவிளையாடல்கள் புரிவதில் நாட்டம் கொண்டவன். பூ மகளிடத்தில் ஈடுபட்டு அவளையே வட்டமிட்டுக் கொண்டிருக்கும் வண்டு போன்றவன்.

சரத்கால சந்திரனையும் பழிக்கும் தாமரை போன்ற முகம்கொண்டு எல்லா உலகங்களையும் மயங்கிடச் செய்யும் பார்வையுடன் கூடிய பேரழகன். வேதாந்த சாஸ்த்திரத்தின் உட்பொருளாயும் நிலையான ஸத்யத்தின் உருவமாகவும் இருப்பவன். பரமாத்மா என்று ஹரிதாஸர்களால் போற்றப்படும் தத்துவ வடிவானனும் அவனே யாவான்.

## 20

## सार्वभौम श्रीपरिमळरङ्गेशः

*कन्नडगौळै* — आदि

सार्वभौम श्री - रङ्गनायक
शरणागतं परिपाहि माँ — [सा]

सर्वमेतत्सत्यं पालनीयनार्हं
रक्ष रक्ष रङ्ग करुणाजलधे — [सा]

कामवासना - कलुषीकृतं
मतिविभ्रमा - दविवेकिनम्
त्यक्तधर्ममार्गं - पापकर्मनिरतं
यदि न बुध्यसे गतिर्नास्ति. मे — [सा]

जनकात्मजा - प्रतिदुष्कृतं
काकदानवं क्षाम्यसि न किम् ?
अभयं प्रयच्छ हरिदासवन्द्य
त्वमेवासि नित्यं परब्रह्मतत्वम् — [सा]

# 20

## ஸார்வபௌமனான ஸ்ரீ பரிமளரங்கன்

கன்னடகௌளை ஆதி

*ஸார்வபௌம ஸ்ரீரங்கநாயக*
*சரணாகதம் பரிபாஹி மாம் (ஸா)*

*ஸர்வமேதத்ஸத்யம் ப்ாலனீயநார்ஹம்*
*ரக்ஷ ரக்ஷ ரங்க கருணாஜலதே (ஸா)*

*காமவாஸனா கலுஷீக்ருதம்*
*மதிவிப்ரமா - தவிவேகினம்*
*த்யக்த தர்மமார்கம் பாபகர்ம நிரதம்*
*யதி ந புத்யஸே கதிர்நாஸ்த்தி மே (ஸா)*

*ஜனகாத்மஜா - ப்ரதி துஷ்க்ருதம்*
*காகதானவம் க்ஷாம்யஸே ந கிம்?*
*அபயம் ப்ரயச்ச ஹரிதாஸவந்த்ய*
*த்வமேவாஸி நித்யம் பரப்ரும்ம தத்வம் (ஸா)*

*மன்னர்களுக் கெல்லாம் மேலான சக்ரவர்த்தியாக விளங்கும் அரங்கா! உன்னைத் தஞ்சமடைந்த என்னைக் காத்தருள்புரிவாயாக.*

*உன்னால் காப்பாற்றப்படுவதற்கு நான் தகுதியற்றவன் என்பது முற்றிலும் உண்மையே. ஆனாலும் கருணைக்கடலான நீ என்னை ஏற்று ரக்ஷிப்பாயாக.*

*காமம் முதலிய சக்திகளால் தூண்டப்பட்டு களங்கப்படுத்தப் பட்டவனும், மதிமயக்கத்தால் விவேகமிழந்தவனும், அறவழியை விட்டுவிலகி தீயசெய்கைகளில் நாட்டமுடையவனுமாயுள்ளேன். இதை நீ நன்கு புரிந்து கொண்டு அருள்புரியாவிட்டால் எனக்கு வேறு கதியே இல்லை.*

*ஜனகராஜன் புதல்வியான சீதையிடம் அபசாரமாக நடந்துகொண்ட காகாஸுரனை நீ மன்னித்தருளவில்லையா? நீ எனக்கு தவறாமல் அபயம் அளிப்பாயாக. ஹரிதாஸர்களால் வணங்கப்படும் மேலான பரப்ரும்ம தத்வமாகவல்லவோ நீ விளங்குகிறாய் (ஆகவே தஞ்சமடைந்த என்னைக் காத்தருள் புரிவாயாக.)*

## 21

# भुवनमोहन कस्तूरीरङ्गपतिः

नाट्टै आदि

परिमळ - रङ्ग - पते
  परिपाहि - कृपा - निधे [प]

अमरेन्द्र - सुर - विनुत
  अगणित - गुण - कीर्ते [प]

पन्नगेन्द्र - तनु - शोभित
  मणि - मण्डप - शयन
मन्द - गमन - कुम्भजा प्रवाह
  तुङ्ग - तरङ्ग सेवितचरण [प]

क्षीर - सागर - सहसोदित
  श्रीरमा - मुख - विलास
श्रित - कमला - सनजनक
  जितमन्मथ - सुकुमार - गात्र [प]

[मध्यमकालः]

राजाधि राजवर - राजगंभीर - रविकुलप्रभाकर -
  भूप - दशरथ - कुमारावतार
[illegible]र-निशाचर - कुलसर्वनाशकर - धीर - रघुवीर
  धरणीसुतारमण - श्री-रामचन्द्र - पूज्य प्रभाव [प]

यशोदा - वरबाल - यदुकुला - नन्दकर
  मन्दार - मालाधर - कन्दर्प - शतकोटि
करुणा - रसपूर्ण - रुक्मिणी सत्य-भामासमेत
  बाल-गोपाल - कृष्ण - रूपधर .. श्री ... [प]

नन्दनन्दन - सुन्दराङ्गन - भुवनमोहन
  मन्दहास - वदनारविन्द - दिव्यसरससल्लापचतुर
संगीतरसरसिक - सरळ मुरळीगान - गोपाङ्गनाजार
  गोपाल - पालित हरिदासश्री ... [प]

## 21

## கலைநாயகன் கஸ்தூரிரங்கன்

நாட்டை ஆதி

பரிமள ரங்கபதே
பரிபாஹி கிருபாநிதே (ப)

அமரேந்திர ஸுரவிநுத
அகணித குணகீர்த்தே (ப)

பன்னகேந்திர தநுசோபித
மணிமண்டப ஸதனு
மந்த கமன கும்பஜாப்ரவாஹ
துங்க தரங்க ஸேவித சரணு (ப)

க்ஷீரஸாகர ஸஹஸோதித
ஸ்ரீரமா முகவிலாஸ
ச்ரித கமலாஸன ஜனக
ஜிதமன்மதஸுகுமாரகாத்ர (ப)

### (மத்யம காலம்)

ராஜாதி ராஜவர - ராஜகம்பீர ரவிகுலப்ரபாகர
பூபதசரத - குமாராவதார
கோர நிசாசர - குலஸர்வநாசகர தீர - ரகுவீர
தரணீஸுதாரமண ஸ்ரீராமசந்திர பூஜ்யப்ரபாவ (ப)
யசோதாவரபால - யதுகுலாநந்தகர
மந்தாரமாலாதர - கந்தர்பசதகோடி
கருணரஸபூர்ண - ருக்மிணிஸத்யபாமா
ஸமேத பாலகோபாலகிருஷ்ண - ரூபதரஸ்ரீ (ப)

நந்த நந்தனு - ஸுந்தராங்கனு - புவனமோஹனு
மந்தஹாஸ வதனாரவிந்த - திவ்யஸரஸஸல்லாபச்துர
ஸங்கீத ரஸ ரஸிக - ஸரளமுரளீகான - கோபாங்கனஜார
கோபால - பாலித ஹரிதாஸ ஸ்ரீ (ப)

*நறுமணம் கமழும் அரங்கத்தரசே! கருணைக் களஞ்சியமே! என்னை நன்கு காத்தருள்வாயாக!*

இந்திரன் போன்ற தேவர்களால் வணங்கப்பட்டு பெரும் குணங்களின் நிறைவினல் கீர்த்தியடைந்தவனே.

பாம்பரசன் உடலால் அழகுபடுத்தப்பட்ட உயர்ந்த ரத்தினங்களால் இழைக்கப்பட்ட மண்டபத்தைச் சார்ந்துள்ளவனே! குடத்திலிருந்து பெருக்கெடுத்து அமைதியாகச் செல்லும் காவிரியின் தெளிவான அலைகளால் வணங்கப்படும் திருவடிகள் கொண்டவனே.

பாற்கடலிலிருந்து திடீரென்று எதிர்பாராமல் தோன்றிய திருமகள் முகத்திற்கு மலர்ச்சியளிப்பவனே! தாமரையை இருக்கையாக அடைந்த பிரும்ம தேவனை ஈன்றவனே! மன்மதனை வென்றவனே! அழகிய மேனியுடன் கூடியவனே

மன்னர்களுக்கெல்லாம் மேலான சக்ரவர்த்தியாகவும், அரசனுக்குண்டான மாட்சியுடன் விளங்குபவனும், பூமியை ஆண்ட தசரதன் புதல்வனுகவும் உருவெடுத்தவனே. கொடிய அரக்கர்கள் குலத்தை வேரோடு அழித்து நிலமகளான ஸீதைக்குப் பிரியநாயகனுய் விளங்கிய ஸ்ரீ இராமபிரானல் வழிபடப்பட்ட பெருமை கொண்டவனே.

யசோதை அன்னையின் சிறந்த புதல்வனுகத் தோன்றி, யதுகுலத்தை சார்ந்தவர்களுக்கு இன்பமூட்டி, மந்தார மாலையணிந்து கோடி மன்மதர்கள் அழகுடன் கருணையுணர்ச்சி நிறம்பப்பெற்று ருக்மிணி , ஸத்யபாமை இவர்களுடன் கூடிய பாலகோபால வேடம் பூண்டவனே.

நந்தனுக்கு ஆனந்த மளிப்பவனே! அழகு மிளிரும் திருமுகம் கொண்டவனே! உலகத்திலுள்ள அனைவரையும் மோகமடையச் செய்பவனே! இளம் குறுநகையுடன் கூடிய தாமரை போன்ற வாயை உடையவனே! மேலான காமக் கேளிக்கைகளில் வல்லவனே! இசைக்கலை இன்பத்தை எப்பொழுதும் சுவைத்துக் கொண்டிருப்பவனே! அனுயாசமாக குழலூதும் சிறப்புடன் ஆயச்சிறுமியர்கள் மனம்கவர்ந்த கோபாலனல் காப்பாற்றப்பட்ட ஹரிதாஸர்களுடன் கூடிய ஸ்ரீபரிமள ரங்கா! என்னைக் காத்தருள்வாயாக.

## 22

# श्रीरमालोल परिमळरङ्गेशः

*करहरप्रिया* — *आदि*

श्यामळगात्र - मोहनरङ्ग
सन्ततं पालय श्रीरमालोल [श्या]

कोमळ कस्तूरी - तिलक गंभीर
  कुमुदिनीनन्दन - सुन्दरवदन [श्या]

सागरसंगम - लालस विभ्रम
  सह्यजा सेवित - मङ्गळचरण
काञ्चनमणिमय - भूषणालङ्कृत
  फणिपति कल्पित - मण्डपशयन [श्या]

सागर कन्यका - मोदितमदन
  सारसलोचन - वीक्षणापाङ्ग
भागवतप्रिय - परमकृपाकर
  पालितहरिदास - देवदेवोत्तम [श्या]

## 22

## திருமகள் மனம் கவர்ந்த மோஹனரங்கன்

கரஹரப்ரியா ஆதி

*ச்யாமளகாத்ர மோஹனரங்க*
*ஸந்ததம் பாலய ஸ்ரீரமாலோல (ச்)*

*கோமள கஸ்தூரீ திலக கம்பீர*
*குமுதினீ நந்தன ஸுந்தரவதன (ச்)*

*ஸாகரஸங்கம லாலஸவிப்ரம*
*ஸஹ்யஜாஸேவித மங்களசரண*
*காஞ்சனமணிமய பூஷணாலங்க்ருத*
*பணிபதிகல்பித மண்டபசயன (ச்)*

*ஸாகரகன்யகா மோதிதமதன*
*ஸாரஸலோசன வீக்ஷண பாங்க*
*பாகவதப்ரிய பரமக்ருபாகர*
*பாலித ஹரிதாஸ தேவதேவோத்தம (ச்)*

*கறுநிறமேனியுடன் வசீகரமாக விளங்கும் அரங்கா. திருமகள் மனதிற்க்கிசைந்தவனே! என்னை எப்பொழுதம் காத்தருள்வாயாக.*

அழகிய கஸ்தூரிப் பொட்டணிந்து கம்பீரமாகத் தோற்றமளிப்பவனே! ஆம்பல் மலருக்கு நாயகனான சந்திரன் போன்ற எழில் மிகுந்த முகம் படைத்தவனே!.

தன்னுடைய பிரிய நாயகனான ஸமுத்ரராஜனை சென்றடைவதில் பெரும் நாட்டமும் பரபரப்பும் கொண்டுள்ள காவிரியால் வணங்கப்படும் மங்களகரமான திருவடிகளைக் கொண்டவனே. தங்கம், உயர்ந்த இரத்தினங்களுடன் கூடிய ஆபரணங்கள் அணிந்து கொண்டு ஒளியுடன் பிரகாசிப்பவனே. அரவங்களின் தலைவனான ஆதிசேஷனால் அமைக்கப்பட்ட மண்டபத்தை சார்ந்து பள்ளி கொண்டுள்ளவனே.

ஸமுத்ரராஜனின் புதல்வியின் மனம்கவர்ந்த மணாளனே! தாமரைக் கண்களின் பார்வை வீச்சினால் எல்லோருடைய உள்ளங்களையும் கொள்ளை கொண்டுள்ளவனே! பரம பாகவதர்களிடம் அன்புபூண்டு மேலான கருணை வடிவமாக உள்ளவனே. உன்னால் காப்பாற்றப்பட்ட ஹரிதாஸர்களால் உயர்ந்த தெய்வமாகப் போற்றப்படுபவனே. (என்னை எப்பொழுதும் காத்தருள்வாயாக)

## 23

## तापनिवारक परिमळ रेङ्गेशः

शुद्धबङ्गाळ आदि

दीन वत्सं माँ पाहि
रमारमण - परिमळरङ्ग [दी]

मानातीत प्रथितविभव
चन्द्रादित्य - सन्नुतचरण [दी]

वेदागममतुलं विदित्वा
वृथा नामस्मरणविहीनम्
सन्द्रानन्द - संपूर्णमनोहर -
श्याम ळाङ्ग - सुन्दर वदन [दी]

आशावश - लुलितं मनो मे
वातादोळित - नौरिवाहम्
तापत्रयहत - हरिदासमुखाच्युतं
श्रृणवन्नपि किं पराङ्मुखमेतत् [दी]

# 23

## ஆனந்த பூர்ண மோகனரங்கன்

சுத்த பங்காளா ஆதி

*தீனவத்ஸம் மாம் பாஹி*
*ரமாரமண பரிமளரங்க (தீ)*

*மானுதீத ப்ரதிதவிபவ*
*சந்திராதித்ய ஸன்நுதசரணு (தீ)*

*வேதாகமமதுலம் விதித்வா*
*வ்ருதா நாமஸ்மரணவிஹீனம்*
*ஸாந்த்ரானந்த ஸம்பூர்ணமனோஹர*
*ச்யாமளாங்க ஸுந்தரவதனு (தீ)*

*ஆசாவசலுலிதம் மனோ மே*
*வாதாந்தோளிதநௌரிவாஹம்*
*தாபத்ரயஹத ஹரிதாஸ முகாச்யுதம்*
*ச்ருண்வன்னபி கிம் பாரங்முகமேதத்? (தீ)*

*திருமகள் மனம் களித்திடச்செய்யும் நாயகனே! பரிமளரங்கா! நலிவடைந்த நிலையில் உள்ள உன் குழந்தையாகிய என்னைக் காத்தருள்வாயாக.*

*அளவிட முடியாத பெருமைகள் நிரம்பப் பெற்றிருப்பவனே! சந்திரன் சூரியன் முதலியவர்களால் வணங்கப்படும் திருவடிகளையுடையவனே!*

*வேதங்களனைத்தையும் நன்கு ஓதியுணர்ந்தும் உனது புண்ணியமான நாமங்களை சிந்திக்காவிட்டால் அவ்வளவும் வீணுனதே. பூர்ணமான ஆனந்தம் நிறம்பபெற்று அதனுல் பிறர் மனதிற்கு களிப்பூட்டும் கறுநிறமான அங்க அவயங்களுடனும், அழகிய முககாந்தியுடனும் சிறந்து விளங்குபவனே!*

*ஆசா பாசங்களுக்குட்பட்ட என்மனது அல்லலுற்றுள்ளது. பெரும் புயற்காற்றினுல் அலைக்கழிக்கப்பட்ட படகுபோல் நான் தத்தளிக்கிறேன். மூன்றுவிதமான தாபங்களாலும் வாட்டப்பட்டுள்ள இந்த ஹரிதாஸன் வாயிலிருந்து வெளிவரும் குமுறலைக் கேட்டும் முகத்தை வேறுபக்கம் திருப்பிக்கொண்டு அலட்சியமாக இருப்பதும் ஏனோ?*

24

# परमकृपाकारी श्रीरङ्गनायिका

*शुरुट्टी या हेमवती* रूपकम्

क्षीरसागरोदित - त्रिभुवनपालिनि
भोगमोक्ष फल - प्रदायिनि [क्षी]

परिमळरङ्गपति - हृदय विलासिनि
पतितजनावन - परमकृपकरि [क्षी]

नवरत्नमणिखचित - भूषणालङ्कृते
नवनवरसभर - वीक्षणापाङ्गे
कुटिलकुन्तळालसित - कोमळाब्जवदने
कोटि कोटि लावण्य - मनोज्ञशीले [क्षी]

साहस्रदळमध्यगते - चारुमन्दहासिनि
मोहपाशनाशकर - ज्ञानस्वरूपिणि
त्रिदशवर्गपूज्यपद - दुरितार्तिभञ्जिनि
विमलभक्तहरिदासं परिपाहि पावनि [क्षी]

24

# பரம க்ருபாகரீ ஶ்ரீ ரங்கநாயகீ

சுருட்டி, ஹேமவதீ ரூபகம்

*க்ஷீரஸாகரோதித த்ரிபுவனபாலினி*
*போகமோக்ஷ பலப்ரதாயினி* *(க்ஷீ)*

*பரிமளரங்கபதி ஹ்ருதயவிலாஸினி*
*பதிதஜனாவன பரமக்ருபாகரி* *(க்ஷீ)*

*நவரத்னமணிகசித பூஷணாலங்க்ருதே*
*நவநவரஸபர வீக்ஷணா பாங்கே*
*குடிலகுந்தளாலஸித கோமாளப்ஜவதனே*
*கோடிகோடி லாவண்ய மனோஜ்ஞசீலே* *(க்ஷீ)*

ஸஹஸ்ர தளமத்யகத சாருமந்தஹாஸினி
மோஹ பாசநாசகர ஞானஸ்வரூபிணி
த்ரிதசவர்க்கபூஜ்யபத துரிதார்த்திபஞ்ஜினி
விமலபக்த ஹரிதாஸம் பரிபாஹி பாவனி (க்ஷீ)

திருப்பாற்கடலில் தோன்றி இம்மூவுலகையும் காத்தருளும் தாயே! இம்மை, மறுமை, இவ்விரண்டிற்க்கும் வேண்டிய நற்பயன்களை வழங்கிவருபவளே.

பரிமளரங்கனின் மனதைக்கவர்ந்து, நிலைதவறிய மாந்தர்களுக்காக ஸ்ரீரங்கநாதனிடம் பரிந்துரைத்து அவர்களைக் காத்திடும் மேலான கருணையுள்ளம் படைத்தவளே.

நவரத்தினங்கள் பதித்த ஆபரணங்களணிந்து புதியபுதிய பாவங்களுடன் கூடிய பார்வையின் வீச்சினால் அழகுடன் விளங்குபவளே! சுருண்ட கேசங்களுடன் விளங்கும் இனிமையான தாமரைமுகம் படைத்தவளே! கோடிக்கணக்கான எழில் மிகுந்த ரூபலாவண்யத்துடன் மனதைக் கவருபவளே!

ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரை அல்லது யோக சாஸ்திர முறைப்படி ஸஹஸ்ரார சக்ரத்தின் நடுவையடைந்து அழகிய புன்சிரிப்பை உதிர்ப்பவளே! மனதில் தோன்றும் ஆசாபாசங்களை நீக்கி தூய்மையான ஞானத்தை வழங்குபவளே! தேவர்கள் கூட்டங்களால் வணங்கப்பட்டு அவர்களுடைய துயரங்களைப் போக்கடிப்பவளே! தூய்மையான உள்ளம் படைத்த ஹரிதாஸனை காத்தருள்வாய், புனிதமானவளே.

## 25

## कामितदायिककल्पकवल्ली श्रीरङ्गनायिका

पुन्नागवराळी आदि

श्रीरङ्गनायिकां शरणं प्रपद्ये
कामितदायिक - कल्पकवल्लीम् [क्षी]

भ्रूभङ्गविलासेन - भुवनविकासिनीं
कटाक्षकल्लोलित - कारुण्यवर्षिणीम् [क्षी]

सागरसम्भव - चन्द्रसहोदरीं
स्मेरवदनजित - विकसितपद्मिनीम्
श्रीरङ्गराजवत्स - नित्यनिवासिनीं
शृङ्गारभावेन - भर्तृसंमोहिनीम् [क्षी]

ललित मनोहर - नूपुरनादित
पल्लवमृदुतर - पादपङ्केरुहाम्
वात्सल्यगुणपूर्ण - जगत्रय मातृकां
हरिदासरक्षण - सन्तत तत्पराम् [क्षी]

शुभम्

## 25

### கற்பகவல்லியான ஸ்ரீரங்கநாயகீ

புன்னாகவராளி ஆதி

*ஸ்ரீரங்கநாயிகாம் சரணம் ப்ரபத்யே*
*காமிததாயக கல்பகவல்லீம்* *(ஸ்ரீ)*

*ப்ரூபங்கவிலாஸேன புவனவிகாஸினீம்*
*கடாக்ஷகல்லோலித காருண்யவர்ஷிணீம்* *(ஸ்ரீ)*

*ஸாகரஸம்பவ சந்த்ரஸஹோதரீம்*
*ஸ்மேரவதனஜித விகஸிதபத்மினீம்*
*ஸ்ரீரங்கராஜவத்ஸ நித்யநிவாஸினீம்*
*ச்ருங்காரபாவேன பர்த்ருஸம்மோஹினீம்* *(ஸ்ரீ)*

*லலித மனோஹர நூபுரநாதித*
*பல்லவம்ருதுதர பாதபங்கேருஹாம்*
*வாத்ஸல்யகுணபூர்ண ஜகத்ரயமாத்ருகாம்*
*ஹரிதாஸரக்ஷண ஸந்ததத்பராம்* *(ஸ்ரீ)*

வேண்டிய வரங்களை வாரிவழங்கும் கற்பகக் கொடியான ஸ்ரீரங்கநாயகித் தாயாரை நான் சரணமடைகிறேன்.

புருவங்களின் அசைவினாலேயே உலகங்களை ஒளிபெறச்செய்பவளும் தன்னுடைய கண்பார்வை வீச்சாகிய அலைவரிசைகளால் கருணையைப் பொழிந்துகொண்டிருப்பவளுமான ஸ்ரீரங்கநாயகி தாயாரை நான் சரணமடைகிறேன்.

பாற்கடலில் தோன்றிய சந்திரனின் ஸஹோதரியான அவள் தன்னுடைய புன்சிரிப்புடன் கூடிய இனிய முககாந்தியால் மலர்ச்சியடைந்த தாமரையின் கர்வத்தை ஒடுக்கியவள். ஸ்ரீரங்கநாதனின் மார்புப்பக்கத்தில் என்றென்றும் வீற்றிருந்து அன்பைச் சொரிந்து அதன் மூலம் தன்கணவனை வசப்படுத்தியவள்.

மனதிற்கு களிப்பூட்டுபவைகளும், இனிமையாக ஒலிப்பதுமான சிலம்புகளுடன் கூடிய, மலரிலும் மென்மையான திருவடிகளைக் கொண்டவள். தாயின் பரிவுணர்ச்சி நிரம்பப் பெற்று இம்மூவுலகையும் காத்தருளும் அன்னையாக உள்ளவள். ஹரிதாஸர்களைக் பாதுகாப்பதில் எப்பொழுதும் கண்ணும் கருத்துமாக உள்ளவள் (இப்படிப்பட்ட ஸ்ரீரங்கநாயகீ தாயாரை நான் சரணமடைகிறேன்).

சுபம்

# திருவரங்கன் பாமாலை

## 1

கரஹரப்ரியா — ஆதி

அரங்கத்து நாதனைக் கரங்குவித்துப் போற்றி
பரம்பொருளென்றே பணிந்திடுவாய் நெஞ்சே (அ)

அறநெறி வழுவிய அரக்கன் லங்கேசனை
சரம்விடுத்து அவன் சிரமறுத்த வீரன் (அ)

பாற்கடலைக் கடைந்து பேரமுதுகண்டு
போர்புரிந்த கணங்கள் கண்டு மருண்டு
மூவுலகும் மகிழும் அவன் மோகனக் கோலமோ
மாதவத்தாலன்றி சாதனமாகுமா? (அ)

தென்னகத்தே சிறந்த வில்லிப்புத்தூர் கோதை
தன்னைமறந்தே கனிந்தளித்தாள் மாலை
தேனமுதேயென்று ஏற்றுக்கொண்டானதை
புண்ணிய அரிதாஸன் என்றென்றும் இன்புற (அ)

## 2

அடாணா — ஆதி

என்று தணியும் என் தனுள்ளத்தின் தாபம்
தோன்றக்கிடைக்குமோ உன் மோகனஉருவம் (எ)

சான்றோரும் காணாத அரங்கனை நினைந்தே
பொற்பதம் பற்றியே போற்றிநின்றேனே (எ)

கமலமுகத்திடையே சுழல்கருவிழிகளும்
பவழவாய் குருநகை கன்னத்துக் குழிகளும்
நீருண்ட மேகம்போல் திறண்டமார்பழகும்
பேரின்பம் வேறில்லை புவனமீரேழிலும் (எ)

கோசலன்குலத்தோன் போற்றிடும் நிதியே
நேசமுற்றோர்களைக் காத்திடும் பதியே
ஆசைகொண்டே நான் சரணடைந்தேனுனையே
மோசம் செய்யாமலே ஆட்கொள்வாய்நீயே (எ)

**மத்யமகாலம்**

காலிற்சிலம்புகள் கலகல ஒலித்திட
மேனியில் முத்துக்கள் பளபள மின்னிட
சடையிடை முடிமலர் எழிலுடன் அசைந்திட
தன்னை மறந்த என்னுள்ளம் குளிர்ந்திட (எ)

ஆடிட ...... இசைபாடிட.....உன்னை நாடிட
நின்பத மலரரிதாஸன் கலந்திட ரங்கா (எ)

கமாஸ் ஆதி

இத் தரணிதன்னில் உண்டோ?
அரங்களுக்கிணையாய் தெய்வம் வேருண்டோ? (இ)

சரணமென்றதுமே ஒடியே வருவான்
தேடிவந்தே உடன் துயர்தீர்த்தருள்வான் (இ)

மரணத்தின் வாயிலில் நாரணன் என்றே
உரைத்ததும் அரிதாஸன் கரைசேர்த்தானே
ஆறறிவேயற்ற கரிராஜன் குரலதன்
பேரவம் கேட்டதும் ஒடோடி வந்தானே (இ)

பாலகன் மொழிதன்னை நிலைபெறச்செய்யவே
கல்லினில் தோன்றியே மலைத்திடச் செய்தானே
அபலை பாஞ்சாலியின் அபயச்சொல்கேட்டே
துகில்மாரி பொழிந்திட்டு துயர்தீர்தானே (இ)

4

மோகனம் ஆதி

சிங்கார ஒய்யார வைபோக ரங்கா
நீ நீங்காத பேரின்ப மளித்திடும் அனங்கா (சி)

ஓம்கார ப்ரணவத்தின் பொருளான நாதா
உயர் ஞானியரும் தேடிவந்தே காணாத பாதா (சி)

காவேரீகரை தன்னில் குடிகொண்டதேவா
நாலாறு மந்திரத்தில் கட்டுண்ட தூயா

அயறாது அன்பர்கள் துயர்தீர்க்கும் சிலா
மார்தன்னில் திருமங்கை தாங்கிடும் லோலா (சி)

மாசற்ற மணிகிரீடம் முடிதன்னில் ஒளித்திட
நேசமுடன் அணிகலங்கள் மேனிதன்னில் குலுங்கிட
ஓசையுடன் சிலம்பங்கள் பாதத்தில் ஒலித்திட
ஆசையுடன் அரிதாஸன் வடிவழகைப் பருகிட (சி)

5

காம்போதி கண்டசாபு

கண்ணாரக் காணவேண்டும்
சிங்கார ரங்கனெழில் (க)

மைவண்ணமேனியதில் மின்னிடுமணிகலங்கள்
எந்நாளும் மலர்ந்திட்ட மந்தார மாலையுடன் (க)

குடம்தன்னிலுதித்திட்ட மடமாதுகாவேரி
வடபாதிசோலையதில் நாட்டமுடன்குடிகொண்டு
படம்தூக்கி விரித்திட்ட சேடனது உடல்மீது
படுத்திட்ட கோலமதைப் பாடியே கொண்டாடி (க)

பரிமீதிலமர்ந்திட்டு கரம்பிடித்த சாட்டையுடன்
நிறமேனி பளிச்சிட சரமுத்து மாலையுடன்
ஒய்யார நடைபோடு வையாளிமிடுக்குடனே
அசைந்தாடும் கோலமதை ஆசையுடன் மனமகிழ (க)

இருகைகள் முன்நீட்டி இறக்கைகள் விரித்திட்டு
பரமன்சீர்பாதம் தாங்கும் பறவைகள் பேரரசன்
கருடன்மீதமர்ந்திட்டு கம்பீர நடைபோடும்
சிறப்பான கோலமதைப் பேரின்பப் பெருக்குடனே (க)

வெண்பட்டு சேலையுடன் கண்டை கொலுசணிந்து
கொண்டைதன்னழகு கண்ட விண்ணோரும் மயங்கினரே
மாதேவன் மனமகிழ மனோகர மாயுதித்த
மோகனக் கோலமதை அகமகிழ எந்நாளும் (க)

கிளிகொஞ்சும் மண்டபத்தில் ஒளிவீசும் சரமணிகள்
தெளிவான யாழினிசை களிப்புடன் மிதந்துவர

அடிமேலடிவைத்து நடமாடிப் படியேறும்
சாய்ந்தாடும் கோலமதை வாயார அரிதாஸன்பாட (க)

சஹானா மிஸ்ரம்

இன்னமும் உறக்கம் தானோ, ஏகாந்த ரங்கனே?
என்மீதிறக்கமும் பிறக்காததேனோ? (இ)

நின்பாதகமலமே ஆதாரமென்றெண்ணி
சிந்திட்ட கண்ணீரும் வீணானதேனோ? (இ)

பாற்கடல் மீதலைகள் சீராட்டித்தாலாட்ட
அரவத்தின் பஞ்சுடல் அயர்த்திடும் பாயாக
திருமகள்மென்கரங்கள் பொற்பாதம் வருடிட
உறக்கத்திலாழ்ந்திட்டு மறந்தனையோ என்னை? (இ)

பிருந்தாவனம் தன்னில் சந்திரன் ஒளிவீச
மந்தாரமாலையுடன் சுந்தரமாய்த்தோன்றி
இனிமையாய்க் குழலூதி கன்னியர் கவர்ந்ததை
எண்ணிக்கருத்திற்கொண்டு மறந்தனையோ என்னை? (இ)

கோதைக்கொடி தன்னில் பூத்திட்ட வார்த்தைகள்
கொத்துக்கொத்தாய் சேர்த்து தொடுத்திட்ட திருப்பாவை
சிந்திட்ட தமிழ்மணம் தூண்டிய மயக்கத்தில்
உறக்கத்திலாழ்ந்திட்டு அரிதாஸன் மறந்தாயோ? (இ)

7

தோடி ஆதி

என்ன பாக்யம் செய்தாளோ ஸ்ரீ ஆண்டாள்
என்ன பாக்யம் செய்தாளோ ஸ்ரீ ஆண்டாள் (எ)

இந்த்ராதி தேவர்களும் எந்நாளும் தேடிவரும்
ஸ்ரீரங்கநாதன் தானே முன்வந்து மாலையிட (எ)

யானைமேலம்பாரிகட்டி வண்ணமலர் மாலைசூடி
சாமரங்கள் வீசிவரத் தெருவில்வந்தாண்டி
வானவரும் மனமகிழ மங்கையரும் மயங்கிவிழ
மனைகள்பல தாண்டிச்சென்று கன்னிக்கோதை இல்லம்வந்தான் (எ)

வாரணமாயிரம் சூழ அந்தணர்கள்வேதம் ஓத
மங்களஇசைபாட பந்தலில் வந்தாண்டி
திருமணவேள்விதன்னை முறையாக வலம்வந்து
அரிதாஸன் போற்றும்கோதை கரம் பிடித்தாளே (எ)

8

பேகடா கண்டசாபு

அடியார்க்கிணை யுண்டோ?
கஸ்தூரி ரங்கனின் (அ)

எட்டாதபொருளான சிங்காரரங்கனை
ஏகாந்த நாயகியாய் மனமாரக்கொஞ்சின (அ)

சொல்லிக்கொண்டாடும் வில்லிப்புத்தூர் ஆழ்வான்
மாலைகணிவித்துத் திருமாலை மகிழ்வித்தான்
கோலாகலமான திருமேனியும் கண்டு
பல்லாண்டுபாடியே நல்வாழ்த்தளித்தானே (அ)

பரிமீதில் வழிசென்ற பரிமளரங்கனைப்
பரிமுதல்செய்தானே திருமங்கை மன்னன்
கருணாலவாலன் தன் கார்மேனியும் கண்டு
தீராக்காமத்தால் பரகாலமங்கையானான் (அ)

மங்கைநிலைபற்றி நீங்காமையலுற்று
அரங்கன் தன்முகம்காணா ஏங்கியே வாடினான்
அடங்காக்காமத்தால் சடகோபனாழ்வானும்
ஏட்டினில் இசைத்திட்டே வடித்தான தன்கண்ணீரை (அ)

மங்கைப் பருவமுற்ற நங்கை திருக்கோதை
அங்கத்திலணிந்திட்டு கனிந்தேயளித்தாள் மாலை
இன்பத் தமிழ்வாக்கால் பாமாலையும் சூட்டி
என்னாளும் அரிதாஸன் மகிழ்ந்திடச்செய்தாளே (அ)

9

யமுனாகல்யாணி மிஸ்ரம்

ரங்கா நீ வேகமாய் வாராய்........ (ர)

வேகமாய் வாராய் நீ முகம் தன்னைக் காட்டாய்
நீல வர்ணனே ரங்கா பன்னகசயனா (ர)

காதினில்குண்டலம் அழகுடன் ஒளித்திட
காலினில் சிலம்பங்கள் இன்னிசை ஒலித்திட
மேனியில் முத்துக்கள் குலுங்கியசைந்திட
என்மனம் மகிழ்வுடன் துள்ளிவிளையாட (ர)

கண்ணிமை வீச்சிலே என்மனம்குழைந்தேனே
புன்நகை மின்வெட்டில் தன்நிலைமறந்தேனே
இன்மொழிப்பெருக்கிலே நின்வசப்பட்டேனே
என்நாளும் அரிதாஸன் ஏங்கியே நின்றேனே (ர)

## 10

ஸ்ரீரஞ்ஜனி ஆதி

ரங்கநாதன் அடி பணிவாய்
இடை விடா மலேயே (ர)

எண்ணிலடங்கா சந்திர சூர்யன்
ஒன்றுசேர்ந்து இணைந்த அழகன் (ர)

கள்ளமற்ற தெளிந்த மனதில்
உட்புகுந்து பள்ளிகொள்வான்
உள்ளம் தன்னைக் கொள்ளைகொண்டு
எல்லையில்லா இன்பமளிப்பான் (ர)

அங்கும் இங்கும் என்றிலாமல்
எங்கும் நிறைந்தே விளங்கும் தேவன்
சங்கு சக்ரம் கையிலேந்தி
வேண்டுமரி தாஸன் காக்கும் (ர)

## 11

காபிநாராயணி ஆதி

ரங்க நாதனையே - சந்ததம்
துதித்திடாய் - வாக்கால் - மனதால் (ர)

தங்கமயமான விமானமெங்கும்
சிங்காரமாய் ஒளிவீசும் வீசும் (ர)

செந்தாமரைபோன்ற வதனம் மீதில்
தவழ்ந்திடும் புன்னகை அள்ளிடும் மனதினை
குலுங்கிடும் முத்துக்கள் மின்னிடும் மாலைகள்
அரிதாஸன் பாட்டிற்கு அசைந்தாடுமழகுடன் (ர)

வளர்காவேரி கரையின் சோலை
தளிர்கொடி மீதே மலர்கொடி போன்றே
நிறைமதியுடனே தோன்றிய மங்கைத்
திருமகள் தன்னையே மார்புரம் தாங்கிடும் (ர)

## 12

உசேனி — கண்டசாபு

எண்ணி எண்ணிப் பார்க்க மனம்
துள்ளி விளையாடுதே (எ)

நினைக்க நினைக்க உன் சிங்காரலீலை
பொங்கிப்பெருகுதே இன்பம் (எ)

பின்னந்தி நேரத்திலே
பொன்னி நதிக்கரை தன்னிலே
மந்தாரப் பூங்கொடிகள் சூழ்ந்திட்ட புதர் நடுவில்
மந்தஹாஸம் உதிர்த்திட்டு நின்றவன் யாரோ? (எ)

நீலக்கடல் போன்றே
தெளிவான வானமதில்
மின்னிட்டுப் பளிச்சிடும் விண்மீன்கள் வரிசைபோல
கண்சிமிட்டி சைகை காட்டி நின்றவன் யாரோ? (எ)

செந்தாமரை யொத்த
சிவந்த கனிவாயில்
அமுதப்பெருக்கெடுக்கும் இனிதானகுழலூதி
அரிதாஸன் முன்தோன்றி அழைத்தவன் யாரோ? (எ)

## 13

தர்பார் — மிச்ரம்

எங்கெங்கு நோக்கினும் சிங்காரரங்கனின்
செந்தாமரை முகப்புன்னகை கண்டேன்
என்னுயிர் தோழீ ........ கண்ணாரக்கண்டேன் (எ)

அண்டசராசர மனைத்திலும் உள்நின்று
கண்டிடும் அன்பர்கள் கொண்டாடி மகிழ்ந்திடும் (எ)

பொன்நிற ஒளிவீசும் கதிரவன் தோற்றத்தில்
சுந்தர உருக்கொண்ட அரங்கனின் முகம்கண்டேன்
கறுநிற மேகத்தில் கதிரொளி வீசிடும்
நிறைமதி வட்டத்தில் கஸ்தூரிப்பொட்டழகும் (எ)

நீலக்கடலதன் கோலாகலத்தினில்
பளிச்சிடும் மேனியைக் களிப்புடன் கண்டேன்
அம்பலவெளிதன்னில் துலங்கிடும் வானத்தி-
லம்மேனியைத் தழுவிடும் அம்பரம் கண்டேனே (எ)

ஆழ்கடல்மீதினில் சூழ்ந்திடும் அலைகளே
எழில்மிகு முகத்தினில் தவழ்ந்திடும் கேசங்கள்
வண்ணமலர் போன்றே மின்னிட்டு குலுங்கிடும்
விண்மீன்கள் வரிசைகள் கண்களுக்கிணையாமோ? (எ)

இதழ்களைவிரித்திட்டு மகிழ்ந்திடும் மலர்களில்
அழகான புன்னகை தவழ்ந்திடக்கண்டேன்
கலகலஒலியுடன் இறைஞ்சிடும் அருவியில்
அரிதாஸன் அருளிய சலங்கைகள் கண்டேனே (எ)

## 14

மத்யமாவதீ ஆதி

ஸ்ரீரங்க நாதனின் பொற்பாத கமலமே
தீராதவினைதீர்க்கும் மேலான கற்பகமே (ஸ்ரீ)

பாரெங்கும் மாந்தர்கள் முன்செய்தவினையெல்லாம்
கதிரவனொளிகண்ட பனிபோலகன்றிடும் (ஸ்ரீ)

தவத்தினாலுயர்ந்திட்ட கௌதமன் சதியுமே
பதியினோர் சாபத்தால் கதியிழந்தாளே
கல்லான உடல்மீது மேலான பதம்பட
தெளிவான நிலைதனைக் கணப்பொழுதில்பெற்றாளே (ஸ்ரீ)

தாரக நாமத்தை நாவினில் தாங்கிட்டு
பரமனின் பதங்களை மனதினில் கொண்டே
வானர உருக்கொண்ட மாருதிஎன்பானும்
வானோரும் புகழ்ந்திட ஆழ்கடல் கடந்தானே (ஸ்ரீ)

புஜபலசெருக்குற்ற மாபலியென்பானும்
நிஜபலமறியாமல் வரமளித்தானே
ஓங்கியே வளர்ந்திட்டு உலகெல்லாம் அளந்திட்ட
செந்தாமரைப்பதம் தாங்கியே நின்றானே (ஸ்ரீ)

காஞ்சியிலுதித்திட்ட வேதாந்ததேசிகன்
வேதாந்தநூல்களை ஆராய்ந்தறிந்தானே
பாதுகைபெருமைக்கோ ராயிரம்மணி செய்ய
ஆதாரமானதே அரிதாஸன் பணிந்திடும் (ஸ்ரீ)

## 15

சுருட்டி மிச்ரம்

ஸ்ரீரங்கநாதனுக் கிணையாரும் உண்டோ?
ஈரேழுலோகத்தில் இவனுக்கு நிகருண்டோ? (ஸ்ரீ)

பாரெங்கும் புகழ்ந்திடும் மன்னாதி மன்னனும்
ஸ்ரீராமசந்திரனின் குலதெய்வமன்றோ? (ஸ்ரீ)
மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாத பரந்தாமன்
காண்போர்கள் உள்ளத்தைக் கவர்ந்திடும் கந்தர்ப்பன்
பங்கயச்செல்வியை மார்தன்னில் கொண்டவன்
விண்ணோரும் வணங்கிடும் வைகுண்டமுறைபவன் (ஸ்ரீ)

அவனியில் தோன்றியே அறநெறிவளர்த்தானே
அரவத்தின் மீதினில் உறக்கத்திலாழ்ந்தானே
பேரின்பப் பெருக்கினைப் பார்ப்போர்க்கு அளிப்பானே
பரமன்தன் துதிபாடும் அரிதாஸன் காப்பானே (ஸ்ரீ)

## 16

ஆனந்தபைரவி ஆதி

தண்டனிட்டேனுன்னையே அகிலாண்டநாயகியே
வேண்டிய வரம்தந்து ஆண்டருள்வாய் நீயே (த)

விண்ணோரும் போற்றிடும் ஞானஸ்வரூபிணியே
நாவலின் நாதரின் மனோகரதேவியே (த)

*ச்யாமள ஒளிமய கோமள சரீரிணி*
*பரிமளரங்கனின் ப்ரியதம ஸோதரி*
*கமலவிலோசினி கலிமலநாசினி*
*நளினபதாம்புஜ ஸகலஜகஜ்ஜனனி* (த)

*கரம் தன்னில் வீணையைத் தாங்கிடும் தேவியே*
*ஸ்வரலய ஒலிகளைப் பரப்பிடும் பாவையே*
*மலர்பதமொன்றையே சரணடைந்தேனே*
*அரிதாஸன் வினைகளை யகற்றுவாயன்னையே* (த)

சுபம்

# திருத்தங்கள்

| பக்கம் | வரி | உள்ளவை | திருத்தங்கள் |
|---|---|---|---|
| 5 | 10 | मालिकान्यपि | मालिकामपि |
| 10 | 23 | எல்லையில்லை | எல்லையில்லா |
| 11 | 1 | லஹஸ்ர | ஸஹஸ்ர |
| 11 | 20 | மேலான க்ஷணங்களுடன் | மேலான லக்ஷணங்களுடன் |
| 12 | 9 | मण्डपशयन | मण्डपसदन |
| 12 | 27 | பொருட்டுடனும் | பொட்டுடனும் |
| 14 | 27 | அரங்களை | அரங்கனை |
| 15 | 15 | पदावली | पदावळी |
| 16 | 5 | மனைத்க | மனைதக் |
| 19 | 16 | போகிகளின் | யோகிகளின் |
| 21 | 23 | श्रृङ्गाररसभर | श्रृङ्गाररसपूर्ण |
| 22 | 10 | ரஸபர | ரஸபூர்ண |
| 23 | 9 | काटाक्षकर | कटाक्षकर |
| 23 | 14 | ललित-नळिन | मृदुळ-ललित |
| 23 | 22 | காமிதாரதத | காமிதார்த |
| 24 | 3 | லலித-நளின | மருதுள-லலித |
| 25 | 6 | आर्तिनिवारय | आर्तिनिवारक |
| 25 | 21 | ஆர்த்தி நிவாரய | ஆர்த்தி நிவாரக |
| 29 | 16 | मण्डलालङ्कृताकार | मण्डलालङ्कृताकार |
| 29 | 19 | पुण्यनामं | पुण्यमूर्तिं |
| 30 | 3 | புண்யநாமம் | புண்யமூர்த்திம் |
| 30 | 21 | முகமண்டத்துடனும் | முகமண்டலத்துடனும் |

| | | | |
|---|---|---|---|
| 30 | 23 | பாமபணைமீது | பாம்பணைமீது |
| 33 | 10 | அரம் | அறம் |
| 33 | 23 | தாஸபாலயம் | தாஸம் பாலய |
| 40 | 20 | परमान्ददायक | परमानन्ददायक |
| 47 | 26 | शरणातोऽस्मि | शरणागतोऽस्मि |
| 49 | 5 | ஹரியிடன் | ஹரியிடம் |
| 52 | 20 | பரம தயாசார்ப்பித | தயாசார்ப்பித |
| 54 | 21 | लाम्बित | लम्बित |
| 55 | 9 | மங்காஷ்டகம் | மங்களாஷ்டகம் |
| 56 | 3 | குஞ்ச | குஞ்ஜ |
| 58 | 1 | பிரும்தாவனத்தின் | பிருந்தாவனத்தின் |
| 59 | 10 | करुणारसभर | करुणारसालय |
| 60 | 2 | கருணாரஸபர | கருணாரஸாலய |
| 79 | 9 | मनदस्मित | मन्दस्मित |
| 85 | 29 | कालियाविषधर | कालियविषधर |
| 96 | 28 | वातादोलित | वातान्दोलित |
| 98 | 9 | नवनवरसभर | नवनवरसभरित |
| 98 | 12 | सहस्रदळमध्यगता | सहस्रदळमध्यगत |
| 98 | 24 | நவநவரஸபர | நவநவரஸபரித |

